


ஸன்லைட் சோப்பினால் துணிகளை சலவை செய்ததும் அவை முன் இருந்ததைவிட சுத்தமாகவும் பளிச்சென்றுமிருக்கின்றன. ஸன்லைட்டின் ஏராளமான நுரை துணியின் ஒவ்வொரு இழைகளிடையேயும் புகுந்து—ஜாஸ்தி அழுக்குப்படிந்த பாகங்களிலிருந்துகூட—அடித்துத் துவைக்கவேண்டிய அவசியமில்லாமலே பூரா மலினங்களையும் சுலபமாக அகற்றுகிறது. உங்கள் துணிகளுக்கு இனியதொரு புதுமையும் மணமும் தருவதுடன் ஸன்லைட் சோப் உங்கள் கைகளுக்கும் நன்மையளிக்கின்றது.




# ஸன்லைட் சோப்

S. 91-50 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED



தலைநிறைந்த கூந்தலே முகத்தின் அழகை எடுத்துக்காட்டுவது. கூந்தலே முக அழகை ஆக்குவதும், அழிப்பதும். கூந்தலழகையும்முக அழகையும் இன்றே கேசவர்த்தினியைக் கொண்டு விருத்தி செய்யுங்கள்.

அற்பகேசத்தைவிட அழகுக்கு ஹானி வேறில்லை. இதைப் பரிஹரிக்கக் கேசவர்த்தினியைவிடச் சிறந்த மருந்துமில்லை. இழந்த கூந்தலையும், இளமையையும் கேசவர்த்தினியைக் கொண்டு இன்றே பெறுங்கள்.

அழகுள்ளவர் ஒரு சிலரே. ஆனால், கூந்தலழகையோ கேசவர்த்தினி உபயோகத்தால் ஒவ்வொருவரும் பெறலாம். கேச சம்பத்து படைத்தவர் அதை இழக்காமல் கேசவர்த்தினி கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியால் அதை அடையுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைக் காப்பது, விருத்தி செய்வது, அழகுபடுத்துவது. விலை அணா 12. மேற்செலவுவேறு. எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்.

தயாரிப்பவர்

**தென் இந்திய ரஸாயன சாலை,**
**"ஆச்ரமம்", க்ராஸ்கட் ரோட்,**
**பவர்ஹவுஸிற்கு அடுத்தது கோயமுத்தூர்,**

No 6 TM

# நிகரற்ற அழகைத் தரும் வாக்களிப்பு






உங்கள் சுய அழகை அதிகரிக்கச்செய்யும் ஓர் மிருதுவான பளபளப்புள்ள சரும நிறம் . . . இதுதான் டாகெட் அண்டு ராம்ஸ்டெல் கம்பெனியால் தயாரிக்கப்பெற்ற இவ்விரண்டு சிரேஷ்டமான க்ரீம்களின் வாக்களிப்பு.

உலகப்பிரசித்திபெற்ற பெர்பெக்ட் கோல்ட்க்ரீம் சருமத்தின் ஆழ்ந்த சுத்தத்திற்கேற்றது. பெர்பெக்ட் க்ளீன்ஸிங் க்ரீம் உடனுக்குடன் சருமத்தை சுத்திசெய்யக்கூடியது. இவ்விரண்டும் உங்கள் சருமத்தின் இளமையையும் அழகையும் திருப்பியளித்து காப்பாற்றக்கூடிய அபூர்வ சக்தி வாய்ந்தவை.

எல்லா கெமிஸ்ட்களிடமும் பிரதான ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

***Daggett & Ramsdell's***

PERFECT COLD CREAM • PERFECT CLEANSING CREAM

# சக்தி ஆரூடம்!

புகழ்பெற்ற "சக்தி பால ஜோதிடரால்'' வருங்கால பலன்கள் தெளிவாகச் சொல்லப்படும். சென்னை வான்கார்ட் இன்ஷியூரன்ஸ் கம்பெனி அகௌண்டண்ட் Sri. S. S. வெங்கட்ராமன் எழுதுகிறார் :- "தாங்கள் கூறும் எதிர்காலப் பலன்கள் ஆச்சரியமானவை. பலன்களில் எனக்கு மிகவும் திருப்தி.'' 1 முதல் 3 எதிர்கால கேள்விகளுக்கு ரூ. 1. மேல் கேள்வி 1-க்கு அணு 8. 1 வருஷ பலன் ரூ. 5. சக்திகவசம் ரூ. 7—8-0. வி. பி. பி. அணு 5. ஜாதகம் or எழுதும் நேரம் தேவை.

சக்தி ஹோம், விருத்தாசலம், P. O. (S. I)

# பொன் விழாவின் உதயம்



பண்டிட டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

வியாதியினால் அவதிப்படும் மனித சமூகத்துக்கு சேவை புரிவதில் ஐம்பதாவது வருஷம் ஆரம்பமாகின்றது. என்றும் போல் இன்றும் ஜீவாம்ருதம் வியாதிக்குப் பின் குணம் பெறுவோர், பலஹீனர் அனைவருக்கும் உகந்த அருமையான டானிக்காக விளங்குகிறது.



ஆயுர்வேதாஸ்ரமம் லிட்.
மதராஸ் 17

## ஸாயி - ஜோதிடம்.

உமது எதிர்கால 5 கேள்விக்கு விபரமாய் பதில் எழுத ரூ. 1¼. ஒரு வருடத்திற்கு:—மாதவாரி பலன் ரூ. 3. வாரா வாரி பலன் ரூ. 7. முழு ஆயுட் பலன் ரூ. 10. மேற்படி சுருக்கம் ரூ. 5. வாழ்க்கைச் சித்திரம் ரூ. 2. ஜாதகம் கணிக்க ரூ. 1. லாபம் நஷ்டம், காணாமற் போதல், ஆயுள், லாடரி, ஷேர் மார்க்கெட் காதல்-இவற்றில் ஒன்றைப்பற்றி எதிர் கால பலன் ரூ. 3. ஜாதகம், அல்லது பிறந்த நாள் குறிப்பு அல்லது கடிதம் எழுதும் நேரமும் வயதும் தேவை.

**ஸாயி ஆஸ்டிரல் ஸ்டுடியோஸ்,**
உறையூர் — திருச்சி.

---

## பாத்ருடுவின் "பால சஞ்சீவினி
(Regd.)

குழந்தைகளின் ஈரல், குலை, ஜுரக்கட்டி வியாதிகளை சொற்ப காலத்தில் நிச்சயம் குணமளிக்கும் சிறந்த மருந்து இது ஒன்றுதான். அசல் விஜயநகரம் மருந்து. போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்.

**Dr. பிள்ளா பாப்பய்யா பாத்ருடு & பிரதர்,**
11, தெற்கு மாட வீதி, மயிலாப்பூர்.

கும்பகோணம் கிளை:—
7, சாரங்கபாணி கோவில் கீழவீதி.

திருச்சி கிளை:—
15, புகழிய பிள்ளை தெரு, தெப்பக்குளம் போஸ்டு.

---

## பொய் என்று நிரூபித்தால் ரூ. 100 அபராதம்.

நரைமயிர்:-சாயத்தை உபயோகிக்காதீர்கள். 60 வருஷங்களுக்கு நிலைத்திருக்கும் எங்கள் அபூர்வ தைலத்தை உபயோகித்து உங்கள் கேசத்தை கறுப்பாக மாற்றுங்கள். தலைவலி குணமாகும். நேத்திரப்பார்வை சமனாகும். சிறு நரை இருந்தால் 2-8-0-க்கு ஒரு புட்டி வாங்குங்கள். அதிகமானால் ரூ. 3-8. ரூ. 5. புட்டிகளை வாங்குங்கள். பயனில்லையெனில், இரட்டிப்பு கிரயத்தை வாபஸ் செய்கிறோம்.

வெண்குஷ்டமும், மகோதரமும்:—இந்த ஆபத்தான வியாதிகளினின்றும் விடுபடுங்கள். நூற்றுக்கணக்கான ஹக்கீம்கள், டாக்டர்கள், கவிராஜ்கள் நற்சாக்ஷியளித்தது. ஒரு சில நாட்கள் எங்கள் மருந்தை உபயோகித்து, நிரந்தரமாக குணம் பெறுங்கள். 15 நாள் மருந்து ரூ. 3-0-0.

Dr. J. N. PRASAD,
11, P. O. Katrisarai (Gaya)

---

தந்தி விலாசம்: "கோகுல்" ஸ்தாபிதம் 1909. டெலிபோன் நெ. 57

# டி. எஸ். ஆர். & கோ.,

## கும்பகோணம்.

(பிராஞ்ச / மன்னார்குடி)

### சந்தனாதித் தைலம் — அரைக்கீரை விதைத் தைலம்
### கோகுல் கூந்தல் தைலம்

கூந்தலுக்கு வளர்ச்சியையும், குளிர்ச்சியையும் கொடுப்பதில் நிகரற்றவை.

**வத்திகளுள் சிறந்தது "கோகுல்" வத்திகள்**
**பல காய்கறி ஊறுகாய், கோகுல் வாசனைப் பாக்கு முதலிய இதர வாசனை சாமான்களும் கிடைக்கும்.**

சோல் ஏஜெண்டுகள்:—
**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்,**
பைகிராப்ட்ஸ் ரோட்,
திருவல்லிக்கேணி, மதராஸ்.

(கோவை & பாலக்காடு ஏஜெண்டு)
**B. Balapattabi Chettiyar,**
246, Vysyal St.,
COIMBATORE.

மறுக்க முடியாத உண்மை !
நாகரீக வாழ்விற்கு அடிப்படையானது
அழகு மிகுந்த ஆடைகளே !!

தொழில் முறையில் அனுபவம் வாய்ந்தவர்களைக் கொண்டு கண்களைக் கவரும் கலர்களில் வனப்பு மிகுந்த ஜரிகை வேலைப்பாடுகளோடு தயாரிக்கப்பட்ட

## பட்டு

**புடவைகள்** **வேஷ்டிகள்**

எங்கள் வசம் ஏராளமாயிருக்கின்றன.

## C. R. பாலுசாமி அய்யர்

115, நைனியப்ப நாய்க்கன் தெரு, மதருஸ். | 9, ஜடாமுனி கோவில் தெரு, மதுரை.

போன் நெ. 3432.

## கண்ணில் பூவிழுதல்

டிகான்ஸ் ஐக்யூர் (ரிஜிஸ்) ஒரு உத்தரவாதமான நிவாரணி. கண் வியாதிகள் எதற்கும் சிறந்தது. அபாயமற்றது. 1000-க் கணக்கான பேர் ஆபரேஷனில்லாமல் சொஸ்தமாயுள்ளனர். உலகப் பிரசித்தி பெற்றது. வெற்றிக்கு உத்தரவாதம். விவரம் இலவசம். விலை ரூ. 3. தபால் செலவு அணா 12.

## செவிடு

முழுச்செவிடு அல்லது அரைச் செவிடு, காதில் இரைச்சல், மற்றும் எக்காரணத்தினாலும் எவ்வித நோயானாலும் நாலே வாரத்தில் சொஸ்தப்படுத்துவதற்கு உத்தரவாதம். ஹானியற்றதும் உடனே பலனளிப்பதுமான மருந்து. கியாதிபெற்ற மூலிகை மருந்து. விவரங்கள் கேட்டால் எழுதுவோம்.

## குஷ்டம், வெண்குஷ்டம்

தீராத நோயும் தீரும். உடம்பு முழுவதுமோ அல்லது பாகத்தில் மட்டுமோ இருந்தாலும் சரி, எமது கியாதிபெற்ற ஹானியற்ற மூலிகைகளினால் நாலே வாரத்தில் பூரண குணம் காண்பீர்கள். விவரங்கள் கேட்டால் எழுதுவோம்.

**KAMALA WORKS,**
6, Panchpota, BENGAL.

# சிறந்த கூந்தல் உணவு

உங்கள் சரீரத்திற்கு நல்ல உணவு அவசியமானதுபோல் கூந்தலுக்கும் நல்ல உணவு அவசியமாகும். உங்கள் கூந்தலின் வசிகரம் நீங்கள் உபயோகிக்கும் கூந்தல் தைலத்தைப் பொறுத்ததே.



## காமினியா ஆயில் (ரெஜிஸ்டர்ட்)

மூளைக்குக் குளிர்ச்சியூட்டி கூந்தல் வளர அவசியமான பலவித சத்துக்கள் சேர்ந்தது. மயிர்க்கால்களுக்கு அவசியமான போஷாக்கு அளிக்கையில், ஆரோக்யமாக வளரவும் உதவுகின்றது. பொடுவன்களைப் போக்கி, கூந்தல் உதிர்வதை நிறுத்தும்.

ஆயிரக்கணக்கானவர்கள் **காமினியா ஆயில்** உபயோகித்துப் புகழ்ந்துள்ளனர்.

இன்றே பரீக்ஷித்து திருப்தி அடையுங்கள்.
எல்லா ஸ்டோர்களிலும் விற்கப்படுவது.
எப்பொழுதும் உபயோகியுங்கள்.

## ஆடோ டில்பஹார் (ரெஜிஸ்டர்ட்)

இணையற்ற வாசனையுள்ளது. நீடித்த நறுமணம் உள்ளது. தபால் முதலிய சார்ஜிற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்பி சாம்பிள் வாங்கிப் பாருங்கள்.

*Sole Agent:*—ANGLO INDIAN DRUG & CHEMICAL CO.,
285, Jumma Musjid, P. O. Box 2085, Bombay 2.

பிரசித்திபெற்ற

## "காஸினோ" ஸ்னோ




உங்கள் முகப்பருவைப்போக்கி, சருமத்தை மிருதுவாக்கி, முகத்தைப் பொலிவுடன் பிரகாசிக்கச் செய்வது 'காஸினோ' ஸ்னோவே.
வாங்கும்பொழுது 'காஸினோ' மார்க்கைப் பார்த்து வாங்குங்கள்.
ஏஜண்டுகள் இல்லாத இடங்களுக்கு ஏஜண்டுகள் தேவை.

விவரங்களுக்கு :

**சந்திரா டிரேடிங் கம்பெனி,**
93, ஆசாரப்பன் தெரு, ஜி. டி., மதராஸ்.

| | | | |
|---|---|---|---|
| A. B. C. Talks | 1 | 4 | 0 |
| ராமானுஜதர்சனம் | 1 | 0 | 0 |
| தீனதயாளு | 0 | 12 | 0 |
| பாலகங்காதர திலக் | 0 | 8 | 0 |
| ஸ்வராஜ்யம் | 0 | 8 | 0 |
| குரு நானக் | 0 | 5 | 0 |
| சங்கராச்சாரியார் | 0 | 5 | 0 |
| ஸ்ரீராம ஜனனம் | 0 | 4 | 0 |

தபால் செலவு பிரத்தியேகம்.

சுதேசமித்திரன் புத்தகசாலை
மவுண்ட்ரோட், சென்னை.




# சுதேசமித்திரன்

வாரப்பதிப்பு




Vol. XVIII] ஸர்வஜித்துஸ்ரீ கார்த்திகைமீ 7உ ★ 1947-ஸ்ரீ நவம்பர்மீ 23உ No. 43

## கிருபலானி ராஜிநாமா

பாபு ராஜேந்திரப்பிரஸாத் காங்கிரஸ் தலைவராக நியமனம் செய்யப்பட்டுவிட்டார். ஆசார்ய கிருபலானி ராஷ்டிரபதி பதவியை ராஜிநாமாச் செய்துவிடப் போவதாகச் சில காலமாகவிருந்து வந்த பிரஸ்தாபம் சென்ற வாரம் உருவடைந்து இறுதியில் அ. இ. கா. கமிட்டி அவரது ராஜிநாமாவை ஏற்றுக்கொண்டுவிட்டது.

தமது ராஜிநாமாவை அ. இ. கா. கமிட்டி முன்பாகச் சமர்ப்பித்து கிருபலானி செய்த பிரசங்கம் நீண்டது. சுதந்திர இந்தியாவின் முன்பாகவுள்ள அநேக பிரச்னைகளை அவர் விரிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார். நாடு துண்டாடப்பட்டதால் விளைந்துள்ள சங்கடங்களையெல்லாம் அவர் சவிஸ்தாரமாகத் தெரிவித்தார். சமஸ்தானங்களால் எழும்பிய பிரச்னைகள், பொருளாதாரத் துறையிலுள்ள நெருக்கடி இவையும் அவரது ஆராய்ச்சியிலிருந்து விடுபடவில்லை. இவற்றுடன் அவர் பண்டித ஜவஹர் தலைமையிலுள்ள சர்க்காரின் போக்கைக் குறித்தும் கோப உணர்ச்சி காட்டியுள்ளார். கிருபலானி அ. இ. கா. முன்பாகக் கூறிய பிரச்னைகளின் பூர்வோத்திரத்தைப்பற்றிய ஆராய்ச்சியில் இறங்குவதைவிட அவற்றைப் பரிகரிப்பதிலேயே நாட்டம் திரும்பவேண்டும். நேருவின் சர்க்காரின் முழுமனதும் இவ்வேலையில் ஈடுபட்டிருப்பது கண்கூடு. ஆனால் கிருபலானி குறைகளைக் காட்டிவிட்டு தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார்.

கிருபலானி விலகுவதற்குக் காரணம் மத்திய ஆட்சியிலிருப்பவர்களுக்கும், காங்கிரஸ் காரியக் கமிட்டியினருக்கும் நெருங்கிய கூட்டுறவு இருக்கவில்லையென்பதுதானும்! காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு அடங்கிய முறையில் மத்திய ஆட்சி இயங்கவேண்டுமென்று பொருள்படும் வகையில் அவருடைய பிரசங்கப்போக்கு அமைந்திருக்கிறது. அவர் மாகாண மந்திரி சபைகளை உதாரணம் காட்டியிருப்பது சற்றும் இங்கு பொருத்தமல்ல. இப்போது பதவியிலுள்ள சர்க்கார், வெள்ளையர் ஆட்சி மறைந்தவுடன் நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ள சிருஷ்டியானதாகும். இதுவரைத் தம்மோடு சம்பந்தமில்லாதவர்களை மத்திய ஆட்சியிலிருந்து விலக்கவேண்டும் என்ற முறையில் பேசுவதும் உசிதமல்ல.

இன்றுள்ள நிலைமையில் நேருவைப் போன்ற தலைவருள்ள ஒரு சர்க்கார் சிருஷ்டி பெறுமென்று எண்ணவும் இடமில்லை. பகுதி பகுதியாகக் கொந்தளித்து எழும் பெரும் பிரச்னைகளைச் சமாளிப்பதில் முனைந்துள்ள அவரது சர்க்காரை பலவிதத்திலும் பலம் பெறச் செய்வதுதான் நேர்மை. அதிகார மாற்றத்தின்போது தலைவர் என்ற முறையில் தம்மை அழைத்திருக்க வேண்டுமென்று கிருபலானி கருதினாலும், கருதாவிட்டாலும் இன்று நேரு தலைமையில் இயங்கும் சர்க்காருக்கிருப்பதைப்போன்ற செல்வாக்கு வேறு எந்த சர்க்காருக்கும் ஏற்படுமென்று நினைக்கமுடியாது. மத்திய ஆட்சியில் மந்திரிப்பதவி தாங்குவதைவிட காங்கிரஸ் தலைமைப் பதவி மிகவும் முக்கியமானதென்பது ராஜன் பாபு ராஷ்டிரபதியாவதிலிருந்து நன்கு தெளிவாகும்.

★



3-வது தடவையாக ராஷ்டிரபதியாகும்
ராஜன் பாபு.

# அவன் யார்?






[சென்றவாரத் தொடர்ச்சி]

கண்ணனிடமிருந்து வந்த கடிதத்தைப் படித்து முடித்த அவன் "அடபாவமே! இதென்ன இந்தப் பையன் கடைசியில் இப்படி எழுதியிருக்கிருனே!" என்று அயர்ந்து போய்விட்டான். பிறகு "அப்படி எழுதினுல் நான் நிச்சயம்சம்மதித்து விடுவேன் என்றுதான் அப்படி எழுதியிருப்பான்! அதுவுமல்லாமல், அல்லியின் இஷ்டம் எப்படியோ! அதைக் கேட்காது இவன் இவ்வளவுவற்புறுத்தி எழுதிவிடுவது என்ன நியாயம்! அல்லி தன்னுடன் சகஜமாகப், பழகிவிட்டாள் என்றதனுல் இப்படி எண்ணிவிடலாமா என்ன?" என்று அவனுக்குத் தோன்றியது. அல்லிக்கு கண்ணன்மீது நாட்டம் இருக்கிறது என்பது கொஞ்சம் தெரிந்திருந்தாலும் "சிறு பெண், நேற்றுக்குழந்தை! அவளுக்கு என்ன தெரியும்! நாம் அப்படி நடக்காதம்மா என்ருல் உடனே தெரிந்துகொள்வாள், புத்திசாலி! அவன்தான் இதை ஏதோ பிரமாதமாக எடுத்துக்கொண்டு, கல்யாணம் பேசுகிருன்!" என்ற எண்ணம் ரஹ்மானுக்கு.

சிறிது பொருத்து ரஹ்மான், "அல்லி இங்கே வா, இதைப் படி! பாவம், எப்படி எழுதியிருக்கிருன்? ஆனுல் எப்படி நடக்கக்கூடும்?" என்று கூறியவாறு அல்லிக்கு அதைப் படிக்கக் கொடுத்துவிட்டு புழக்கடைக்குச் சென்ருன்.

அல்லி ஒரு கால் மணி நேரங் கழித்து கண்களில் நீர் தளும்ப வந்தாள் சமையலறைக்கு. அங்கே சாப்பிடத் தயாராக உட்கார்ந்திருந்த ரஹ்மானுக்கு மௌனமாக உணவு பரிமாறினுள்.

"நீயும் உட்கார்ந்துகொண்டு சாப்பிடேனம்மா, தினம்போல! ஏன் தட்டை எடுத்து வைத்துக் கொள்ளவில்லை?" என்று கேட்டான் ரஹ்மான்.

அப்புறம் சாப்பிடுகிறேன் பாபா! சாப்பிடணுமென்றே தோனல்லே" என்ருள் அல்லி.

"ஏனம்மா?... கடிதத்தைப் பார்த்து வருத்தமாயிருக்கா? ஆமம்மா எனக்கும் அப்படித்தான் இருக்கிறது! அந்தப் பையன் சாவு கீவுன்னு அனுவசியமாக எழுதியிருக்க வேண்டாம்!" என்று சொல்லிவிட்டு கொஞ்சமாக சீக்கிரமாகச் சாப்பிட்டுவிட்டு, எழுந்துவிட்டான் ரஹ்மான்.

பாவம், அல்லி பாபாவின் வார்த்தைகளால் மனம் தேறினுள்!

"பாபா கண்ணனின் விருப்பத்தை நிறைவேற்றக் காத்திருக்கையில், அவன் அப்படி சாவு, கீவு என்று அனுவசியமாக எழுதியிருக்க வேண்டாம்!' என்பதைத்தான் பாபா கூறினுன் என்று நினைத்துவிட்டாள்!

பாபா எழுந்து போனதுமே, அவளும் உணவு உட்கொண்டாள். பாபாவின் வார்த்தைகளால் ஆறுதல் அடைந்துவிட்ட அவள், வழக்கம்போல சாப்பிட்டாள். சமையலறையைப் பரபரவென்று சுத்தம் செய்தாள்; காரியங்களைச் செய்துகொண்டிருந்தாள்.

சாப்பிட்டுவிட்டு வாசலுக்குச் சென்ற ரஹ்மான், உள்ளே அல்லி சாப்பிட்டதையும், என்றும்போல அவள் அனைத்தும் செய்வதையும் கண்ணுற்று, "நம் மனதை அறிந்தும் அல்லி வருத்தம் அடையவில்லை! அல்லிக்குக் கண்ணனை மணம் செய்துகொள்ளும் எண்ணம் சிறிதும் இருக்கவில்லை, இல்லை என்று தெரிகிறது!" என்று சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தான்.

அந்த நம்பிக்கை வந்த பின்னர் ஏற்பட்ட ஏமாற்றம்தான், அவன் உள்ளத்தைக் குலுக்கிவிட்டு, உடம்பை அடித்துப் போட்டுவிட்டது. பொறியில் அகப்பட்ட எலி போல வேதனைக்குள்ளானுன்.

சுமார் பகல் ஒரு மணி இருக்கும். அதற்குமுன் இரண்டுமூன்றுதடவை ரஹ்மான் தைத்துக் கொண்டிருப்பதை பார்த்து விட்டு உள்ளே சென்று விட்ட அல்லி, அப்போது பாபாவின் அருகில் வந்தாள்.

பாபா, இனிமேல் நானும், நீயும் பிரிந்துவிடுவோம் என்ற பயத்துக்கு இடமில்லை! என்ருள்.

மூவரும் குடியேறுவோம் என்ற கண்ணனின் வார்த்தைகளின் நினைவு அவளுக்கு. கல்யாணமானுலும் பாபாவைப் பிரியோம்! என்ற சந்தோஷம் அவளுக்கு.

ஆமம்மா, அல்லி, அந்த பயமில்லை! என்று பதிலளித்தானே. அவன் எண்ணம் என்ன?

கல்யாணமில்லை என்றுதான் அல்லி சொல்வதாக அவன் நினைப்பு! கண்ணனின் வார்த்தைகள் அல்லி மனதில் ஊன்றினுற் போல அவன் மனதில் ஊன்ருத காரணம்? யோசனையின்மை! தன் தவறை தான் பிசகாக நினைத்ததை, அவன் அல்லி அடுத்தாற் போல கூறியபோதுதான் தெளிவாக உணர்ந்தான்.

"பாபா, அவர் இரண்டுநாள் கழித்து எழுதினுலும் எழுதலாம் என்று சொல்லியிருந்தாலும், நீங்கள் இன்றே எழுதிவிடுங்களேன்! சந்தோஷ சமாசாரத்தை இரண்டு நாள் முன்னதாகக்கேட்பதில் என்ன நஷ்டம்? நீங்கள் இரண்டு நாள் கழித்து எழுத, தபாலில் ஏதாவது கோளாறு ஏற்பட்டு, எங்காவது இரண்டு நாள் அது தாமதப்பட்டுவிட்டால், கடிதம் வரக்காணுமே, என்று மகுதியண்டை அவர் உயிரை மாய்த்துக்கொண்டு விட்டாலும் விடுவார் பாபா, எனக்கு பயமாயிருக்கு!" என்று கூறிவிட்டு, அவ்விடத்தைவிட்டு அகன்ருள் அல்லி!

ஆ! என்ன சொல்கிருள்! என்னும் அதிர்ச்சி அப்போதுதான் ஏற்பட்டதவனுக்கு. உயரே விமானத்தில் பறந்து செல்பவன் தரையில் மோதுண்டதைப்போல, ஒரு உயிரற்ற தன்மை நெஞ்சிலும் உடலிலும்!

"என்ன சொல்கிறாள் அவள்! சந்தோஷச் செய்தியைச் சீக்கிரம் தெரிவித்து விடுங்களேன் என்கிறாளா? ஏமாற்றத்தால் உயிரை மாய்த்துக்கொண்டு விடுவான் கடிதம் போய்ச் சேராவிட்டால் என்று பயப்படுகிறாள்! அப்படியானால் ஏமாற்றமளிக்கும்படி நேர்ந்தால் அவன் உயிர் விடுவேன் என்று சொல்வதை, இவள் நம்புகிறாளா? அவன் அன்பிலே, அவன் வார்த்தைகளிலே அவ்வளவு உண்மையும், உறுதியும் காண்கிறாளா அவள் தன்னை மணக்காவிட்டால் அவன், உயிர் விடுவான் என்பதுதான் இவளுடைய நம்பிக்கையுமா? இவள் மனதும் அவன் மனதுடன் ஒன்றுபட்டு விட்டதா?

இந்தக் குழப்பத்தால் அவனுக்குத் தலை சுழன்றது. மண்டையில் இடி இடித்தது. சோர்வும் கடுமையான தலைவலியும் அவனை ஆட்கொண்டு அவனைப் படுக்கையிலே கிடத்தின.

இப்படிப் படுத்தவன்தான் பழைய நினைவுகளுக்கு எடுத்தேகப்பட்டான் மானஸீகமாக. இறந்த கால முடிவுக்கு வந்தவன், நிகழ் காலத்தைப் பற்றி சிந்திக்கலானான்.

கடந்த சில வருஷங்களாக அமைதியும், ஆனந்தமுமே கண்டிருந்த அவனுக்கு, இந்த தர்ம சங்கடமான நிலைமைதான் மாபெருங் கஷ்டமாயிருந்தது!

ஆ! தான் இன்னது செய்வதென்பதே விளங்கவில்லையே! அல்லியின் மனம் கண்ணனைத்தான் நாடி விட்டது, அவனை மணக்கப் போவதாகவே அவள் மனப்பால் குடித்து வருகிறாள்! மனச்சாட்சி, வற்புறுத்தி வலியுறுத்தி அதைத்தான் சொல்கிறது! கண்ணனின் விருப்பமும், தன் கண்ணான அல்லியின் விருப்பமும் ஒன்றாயிருக்கும்போது, அவன் அவர்கள் விருப்பப்படி நடந்து கொள்வதா, அல்லது தன் விருப்பப்படி நடப்பதா?.........

ஆனால்... தன் விருப்பம் என்ன? அந்தப் பையனுக்கு இவளைக் கொடுக்கக்கூடாது என்பது! அப்படியென்றால், அல்லி மனமுடைந்து வருந்தணும் என்பதா? இல்லையே!...ஐயோ அருமையான அல்லி, வருந்துவதா? கூடாது! கூடவே கூடாது! ஐயோ, பிற்காலத்திலும் அவள் சந்தோஷமாய் வாழவேண்டும் என்பதுதானே அவன் ஆசை, அக்கரை எல்லாம்! அவளை இத்தனை நாளும் அருமை பெருமையுடன், ஒரு குறையும் தோன்றாவண்ணம் வளர்த்து விட்டு, இப்போது அவன் மனம் முறியும்படி நடந்துகொள்வதா? அவள் மணவாழ்க்கை இன்பகரமாக இருக்கவேண்டியதைத் தானே தான் கவனிக்கணும்! தன் வாழ்க்கையை செம்மைப்படுத்தினாளே, அவள் வாழ்வைதான் குலைப்பதா? அவன் கடமை, அவளை அவள் விரும்பும் பையனுக்குக் கட்டிக்கொடுத்துச் சந்தோஷமாக வைத்திருப்பதன்றோ? ஆனால் கடமையை நிறைவேற்றத் துணிவு வருமோ தனக்கு! கட்டுப்பாட்டை மீறிப்போக... ஐயோ, துணிவு வராதுபோலிருக்கிறதே! ...வராது, எப்படித் துணிந்து தன் மதத்தினன் அல்லாதவனுக்குப் பெண்ணைக் கொடுப்பான்! இந்துவுடன் சம்பந்தம் செய்வதைப் பார்த்துக்கொண்டு சமூகம் சும்மா இருக்குமா, அல்லது தன் மனம்தான் நிம்மதியாய் விட்டுவைக்குமா?...... பைஜாமாவும், தொப்பியும் அணிந்து முஸ்லிமாகி விடுகிறேன் என்கிறானே, அதைக்கண்டு கண்கள் ஏமாந்து போனாலும், தன் மனச்சாட்சி ஆயிரம் துளை துளைத்து ஆயிரமாயிரம் கண்களை மனத்தில் உண்டாக்கி விடுமே!

இதே கவலை, திகில் கொண்டு மத்திடைத் தயிராகக் கலங்கியது அவன் உள்ளம். ஒரு வழியும் காணாத அவன் மனம், அல்லாவை நாடியது.

ஆ! அல்லாதான் தன் இக்கட்டைத் தீர்த்து வைக்க வேண்டும்! வேறு யார் யோசனை கூறுவார்கள்?—இந்தச் சங்கடமான நிலைமையை இந்துவான அவனை, முஸ்லிம் ஆன, தான் மாப்பிள்ளையாக ஏற்பதா என்னும் இந்த நிலைமையை ஐயோ எப்படி சமாளிப்பது! கண்ணன் இந்து:—அல்லி, முஸ்லிம், இவர்களிருவருக்கும் எப்படி?

ஆ! என்ன, என்ன, அல்லி என்ன! முஸ்லிமா?...ஆம், ஆனால் இப்போதல்லவா அவள் முஸ்லிம்! பிறந்தபொழுது! ஐயோ, பிறந்து நான்கு



வருடங்கள் வரை அவள் இந்து வல்லவோ? தன் மதி எங்கே போயிற்று? அவளுக்குப் பைஜாமா வும், நீண்ட கைச்சட்டைகளும் அணிவித்து அவனல்லவோ அவளை முஸ்லிம் ஆக்கினன்! கண்ணனைப் பழித்தானே சிறிது முன்பு! தான் அப்படிச் செய்தவன் தானே! அந்தோ! இந்த உண்மையை முன்னரே உணராது போனுனே!

இப்போதுதான் என்னமோசம், இப்போதாவது உண்மை, கண்களுக்குப் புலப்பட்டதே! அல்லாவை நினைத்ததுமே, கருணை வள்ளல் அவர், விரைந்தாரே! அவர் அருளே அருள்! தான் எத்தனை நாழியாக பழைய நினைவுகளில் ஈடுபட்டிருந்தும், அல்லி முந்திய நாளில் இந்து என்ற நினைவே இல்லாமலிருந்ததே. இப்போது 'வழிகாட்டு!' என்று அல்லாவிடம புகலடைந்ததும், பிரமை நீங்கியதே! ''அல்லியின் பிறப்புரிமை கண்ணனை மணப்பதே'' என்பதைத் தனக்கறிவுறுத்த அல்லவோ, மறைந்திருந்த, மறந்திருந்த உண்மை ஒன்றை ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கச்செய்துவிட்டார்? ஆம்! அல்லியின் பிறப்புரிமை கண்ணனை மணப்பதே யாகும். அதைத் தடுக்க அவன் யார்?

அவள் தன் கையில் சிக்காமல் இருந்திருந்தால், தந்தையிடமே இருந்திருந்தால், ஒரு தடையுமில்லாமல் இந்தக்கண்ணனையே மணந்தும் இருக்கலாம். பாவம் தன் கையில் சிக்கினுலும், அல்லி, அவனையும் அறியாமல், அவளுக்குச் செய்திருக்கும் நன்மைகள் தான் எத்தனை? ஆகா! அவள் தனக்குச் செய்த உயர்தர நன்மைகளுக்கு பதிலுபகாரம், அவள் மதத்தினனுன அவள் காதலனுடன் அவளை வாழாமல் தடுப்பதா? தடுக்கயிருந்தானே, பாவி. தடுக்க அவன் யார்?

ஜன்ம ஜன்மங்களுக்கும் அவளுக்குக் கடமைப்பட்டிருக்கக் கூடிய நன்மைகளை அவளால் அடைந்து, ஒரு பன்னிரண்டு வருஷம் அவளைப் பாதுகாத்த தோஷத்திற்காக, அவள் வாணுளை வீணுக்க அவனுக்குஎன்ன உரிமை!

அந்தோ! அவள் ஏன் முஸ்லீமான அவனிடம் வந்து சேர வேண்டும்?......இந்துவான எவனிடமாவது இப்படி வளர்ந்திருந்தால், ஒருதடையுமில்லாமல்அவள் விருப்பம் ஈடேறியிருக்குமே!

ஆனுல்...விதி செய்யும் பல விளையாடல்களில் இதுவும் ஒன்றுதான்! இவள் தன்னிடம் முஸ்லிம் பெண்ணுக வளர்ந்தபின்...பலவித மாறுதல்களுக்குப்பின், கண்ணனின் கையைப்பிடிக்கனுமென்று விதி போலும்! ஆம், ஆம்! நதியொன்று எத்தனை இடங்களில், எத்தகைய மாறுதல்களோடு பிரவகித்தாலும் இறுதியில், கடமையெல்லாம் முடிந்தபின். கடலையே போய்ச் சேருகிறதன்றோ? அதுபோலதான் அல்லியும்! கண்ணனை மணக்கவே அவள் பிறந்தாலும். அவனைப் புனிதனுக்கக் கடவுள் இட்ட பணியை நிறைவேற்றத் தன்னிடம் வந்து வளர்ந்துவிட்டு. இப்போது கண்ணனை அடைய விருக்கிருள்!

அல்லாவின் விருப்பதாலன்றோ, அருளாலன்றோ, ஒரு பெரிய தவறு செய்ய இருந்தவன் தப்பினன்! அவர் விருப்பத்தைத் தன் விருப்பமாகக்கொண்டு, துணிவுடனும். உவகையுடனும் தன் கடமையை அவன் நிறைவேற்ற வேண்டாமோ! கவலை எதற்கு? அல்லியையும் கண்ணனையும் ஒன்றுசேர்த்துவிட்டுத்தான் அவர்களைப் பிரியனுமென்பதில்லையே. கண்ணன் கூறியபடி...ஆம், அல்லியும் அதைத்தான் கூறியிருக்க வேண்டும்........மூவரும் ஒன்று சேர்ந்து இருப்பதில் என்னதடை? தான் ஏதும் தவருனதைச் செய்யாத ஆறுதல், அவள் பிறப்புரிமையைக் காப்பாற்றிய உவகை, அவளுடைய இன்பமான இல்லறவாழ்க்கையினுல் தன் மனதிற்கு அமைதி, இவைதானே அவனுக்குக் கிட்டப்போகின்றன?

புத்துணர்ச்சி பெற்றவனுய் படுக்கையை விட்டெழுந்தான் ரஹ்மான், மத்திடைத் தயிர்போல அவன் கலங்கினுலும் வெண்ணெய் கிடைத்துவிட்டதே!

"அல்லி, அல்லி! சீக்கிரம் தபால் கவரையும், காகிதத்தையும் எடுத்துவாம்மா!'' என்று கூவியவாறே,பரபரப்புடன் திண்ணையில் விளக்கைப் பெரிதாக்கிவிட்டுப் பேனவுடன் அமர்ந்தான்! ரஹ்மான் சாயபு, "மணியாகிவிட்டதே பாபா! எப்படியும் இன்றைய தபாலிவே போகாதே! நாளைக்கே எழுதலாமே! மத்தியானம் எழுதி போட்டிருந்தால்..." என்று கேட்டுக்கொண்டே வந்தாள் அல்லி.

'எனக்கு என்னமோ தலைவலி மண்டையைப் பிளக்கிறமா? இல்லாவிட்டால் எழுதியிருக்க மாட்டேனு? பரவாயில்லை. இப்போது எழுதிவிடுகிறேன், எடுத்துவா அவற்றை!' என்றுகனிவுடன் கூறிய ரஹ்மான், சிரித்துக்கொண்டே தொடர்ந்து, "உனக்கு வெட்கமாயிருக்கிறதாக்கும்! நானே போய் எடுத்துக்கொள்ளட்டுமா?'' என்று எழுந்தான் நாற்காலியிலிருந்து.

நாணம் சூழ்ந்துகொண்டாலும், அதை மறைக்க முயன்றுகொண்டே அல்லி. "போ, பாபா! என்ன பாபா! வெட்கமெதற்கு! இரு, இரு நானே கொண்டு வருகிறேன்!'' என்று துள்ளிக் குதித்துக்கொண்டே உள்ளே ஓடினுள்.

அலாதியான சந்தோஷம் பொங்கும் முகத்தினளாய், முகத்தில் பன்மடங்கு பொலிவு பிரகாசிக்க, நடைதுள்ள உள்ளே ஓடிய அல்லியைப் பார்த்தவாறே, இமை கொட்டாமல் உட்கார்ந்திருந்தான் ரஹ்மான். வானுலக தேவரின் ஒரு அம்சமான அந்த இமை கொட்டாத் தன்மையிலே, அவனும் ஒரு தேவாம்சம் பெற்றுவிட்டான்! அல்லியிடமே தன் உலகம் முழுவதும் அடங்கியிருப்பதாக, இதுநாள்வரை உரிமைகொண்டாடி,இறுமாந்திருந்த அவன் உள்ளம் இப்போது, அல்லி அல்லி! இந்துவாகப் பிறந்த உன்னை, இந்துவை மணக்கக் கூடாது என்று தடுத்து உன் வாழ்வை, பாழ்செய்ய இருந்தேனே! உன் பிறப்புரிமையைத் தடுக்க நான் யார்? என்று எண்ணமிட்டு உருப்போட்டுக்கொண்டிருந்தது!

சிறிது பொருத்து அல்லி கொணர்ந்திருந்த வெள்ளைத் தாளின் மேலே, "ஆதரிசமான கலப்பு மணத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கட்டும், உங்கள் திருமணம்!' என்று கண்ணனுக்கே எழுதிக்கொண்டிருந்தது ரஹ்மானின் கை.

மகிழ்வும், அன்பும், பக்தியும் நன்றியும் உள்ளத்திலே பெருக, அல்லி, "என் பாபா, என் அருமையான பாபா!'' என்று போற்றிக்கொண்டிருந்த அவ்வமயம், "தடுக்க நான் யார்?'' என்று கேட்டுக் கொண்டிருந்ததே பாபாவின் மனம். அதன் காரணங்களெல்லாம், அவன் எப்படி அறிவான்?

# இரத்தக் கண்ணீர்!

அ. சு. பா.

1

அன்னையின் விலங்கை அகற்றி விட்டோம்;
ஆயினுமென்ன? நமக்குள்ளே
இன்னமும் சண்டை நீங்கவில்லை
இந்நிலை மிகவும் இழிவாகும்;
எண்ணரும் மக்கள் இறந்தார்கள்;
இரத்தக் கண்ணீர் வடித்தோம் நாம்!
அன்னியன் ஆட்சி மேல் போலும்!
என்னும் நிலையில் இன்றுள்ளோம்!

2

இந்தியத்தாயின் எழிலுடலை
இரு கூறக்க இசைந்தோமே!
முந்திய காலம் முன்னோர்கள்
முதிர்ந்த உறவை முறித்தோமே!
சிந்திய ரத்தம் சிறிதளவா!
செத்தவரின் தொகை எத்தனையோ!
இந்தப் பழிகள் இல்லாமல்
இனிமேலேனும் இணைந்திருப்போம்.

3

புண்ணிய பாரத பூமிதனில்
பூசல், நாசம், கொலையென்னில்
கண்ணியம் ஆமா? கருதுங்கள்!
கண்டவர் எள்ளி நகையாரோ?
என்னரும் இந்து முஸ்லீம்காள்!
ஏனோ சண்டை இடுகின்றீர்?
அன்னை நமக்கே ஒருவளன்றோ?
அவளின் புதல்வர் நாமன்றோ?

4

ஆண்டு பலவாய் அனைவருமே
அல்லும் பகலும் போராடி
ஈண்டு பெற்ற சுதந்திரத்தை
இனி நாம் பறி கொடுத் (து) ஏங்குவதோ?
வேண்டாம் நமக்குள் வேற்றுமைகள்;
வெகுளியை அறவே விடுவோம் நாம்.
யாண்டும் அன்பின் வலிமையினால்
இனிதே வாழ்வோம் இகமீதே.




## 16

# தேசீயத் திருக்கல்யாணம்: ஆனல் ?

★

நமது சுயராஜ்யப் போராட்டத்திலே, ஒரு முக்கியமான—நெருக்கடியான—ஆண்டு 1920-ம் ஆண்டு. இது பொதுவாகச் சென்னை மாகாணவாசிகளுக்கும் சிறப்பாகத் திருநெல்வேலி வாசிகளுக்கும் அதி முக்கியமான ஆண்டுகளில் ஒன்றாகும். "திலகர் வரப்போகிறார், திருநெல்வேலியில் கூடும் மாகாண மகாநாட்டுக்கு" என்ற பேச்சுக்கு முன் திருநெல்வேலிக்காரர்களின் போலீஸ்-பயமெல்லாம் பேய்விட்டது. சூரியனைக் கண்ட பனிபோல, தாம்பிரபருணியின் சாரல் வெள்ளம் கண்ட தாபம்போலே.

### திலகம் திலகரே !

"இன்னும் சில நாட்களில் புறப்பட்டு விடுவார்" என்ற பேச்சைக் கேட்டதும், 'சில தினங்களிலேயே சுயராஜ்யம் புனாவிலிருந்து புறப்பட்டு வந்துவிடும்!" என்பது போன்ற ஒரு நம்பிக்கையும் பிறந்துவிட்டது பல கிராமவாசிகளுக்கு. போலீஸ் ராஜ்யத்தின் வல்லமையும் இரகசியப் போலீஸாரின் சூட்சும சக்திகளும், ஏதோ கெட்ட கனவுகள்போல எங்களுக்குத் தோன்றிவிட்டன. "திலகர் புறப்பட்டுவிட்டார்" என்று கூடப் பேச்சாயிருந்தது. திருநெல்வேலி முழுவதும் கண்களாகவும் செவிகளாகவும் இருந்தது, திலகரைப்பார்க்கவும் கேட்கவும். அந்த மகாநாட்டில் தீர்மானிக்கவேண்டிய, நெருக்கடியான அரசியல்-பிரச்சினை கூட அவ்வளவு முக்கியமாகத் தோன்றவில்லை திருநெல்வேலி மகாஜனங்களுக்கு.

வேறு தலைவர்களும் மகாநாட்டுக்கு விஜயம் செய்வார்கள்; ஸ்ரீ அனிபெஸன்டின் அற்புதமான வாக்குப் பிரவாகத்தை அமிர்தமாய்ப் பருகலாம்; ஸ்ரீமான் ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாரின் பண்பட்ட ஆங்கில வாசகத் தேனை ருசித்து அனுபவிக்கலாம். ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாஸ ஐயங்காரின் ஊசிமுனையில் நடம்புரியும் நுண்ணறிவையும் வாதாடும் தர்க்கத்திறமையையும் காணலாம். இப்படியெல்லாம் நினைத்துக் கூட்டம் போட்டவர்களும் உண்டு, எனக்கும் அந்த ஆவல் உண்டு. எனினும், "மகாநாட்டுக்குத் திலகமாக விளங்குவார் திலகர்" என்ற எண்ணந்தான், ஆசைதான், பொது மக்களின் உள்ளங்களில் களிநடம் புரிந்தது.

பாரதமாதாவின் திலகத்திற்கு—மகாராஷ்டிர வீரகேசரிக்கு—தக்க வரவேற்பு அளிக்க வேண்டுமென்று நாடு தயாராய் இருந்தது; திருநெல்வேலி துடித்துக்கொண்டிருந்தது. சென்னையிலிருந்து திருநெல்வேலி வரையிலுமுள்ள இருப்புப்பாதை நிலையங்களெல்லாம் இசை மயமாகவும் அழகு மயமாகவும் ஜொலிக்கத் தயார் என்றால், அது மிகையாகாது. மேள தாளங்களுடனும் பாண்டு வாத்தியங்களுடனும், வைதிகர்கள் பூர்ண கும்ப—வேத கோஷங்களுடனும், தேச பக்தர்கள் வந்தே மாதர கோஷங்களுடனும் ரோஜாப்பூ மாலைகளுடனும் காத்திருந்தார்கள். "இந்த ரயிலில் வந்து விடுவார்; அடுத்த ரயிலில் நிச்சயமாக வருவார்!" என்ற எண்ணத்துடன், நாங்கள் அடிக்கடி திருநெல்வேலி ஜங்ஷனுக்குப் போய் வந்தோம்.

> ராஜா வருவாரென்று
> ரோஜாப்பூ வாங்கி வைத்தேன்!

என்ற மன நிலையுடன் தமிழகம் இந்தியாவின் முடிசூடா மன்னராகிவிட்ட 'திலக மகாராஜா'வை வழிமேல் விழிவைத்து எதிர் நோக்கிய வண்ணமாய் இருந்தது.

திருநெல்வேலியில் தமிழ்நாட்டு ஜனங்கள் மட்டுமல்ல, சென்னை மாகாணத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஏராளமான மக்கள்—தலைவர்களும், தொண்டர்களும், மிதவாதிகளும் அமிதவாதிகளும், தேசநேசர்களும் சுய நல தாசர்களும்—தாம்பிரபருணி ஆற்றங்கரையில் பிரம்மாண்டமாக அமைக்கப்பெற்றிருந்த மகாநாட்டுக் கொட்டகையில் கூடிவிட்டார்கள். வடக்கே கஞ்சம் ஜில்லாவரையுள்ள பிரதேசங்களிலிருந்தும், மைசூர், மலையாளம் முதலான பிரதேசங்களிலிருந்தும்கூட ஜன சமுத்திரம் பெருக ஆரம்பித்துவிட்டது. திருநெல்வேலியை நாடிய மலையாளிகளும் கன்னடஸ்தர்களும் ஆந்திரர்களும தமிழர்களோடு சேர்ந்து நடத்திய கடைசிச் சென்னை மாகாண மகாநாடு திருநெல்வேலியில் 1920-ம் ஆண்டில் கூடிய மகாநாடு தான். அப்பால் மொழிவாரியாகப் பிரிந்தே, மாகாண மகாநாடுகள் நடைபெறலாயின.

### நெருக்கடியான ஒரு சந்தர்ப்பம்

1920—ம் ஆண்டை ஒரு புதிய தேசீய சகாப்தத்தின் தொடக்கம் என்று சொல்லலாம். யுத்த காலத்தில் (முதலாவது உலக மகா யுத்த காலத்தில்) சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டுமென்று வற்புறுத்திய காந்தி அடிகள் ஒத்துழையாமை இயக்

கம் தொடங்கிவிட்டார். ஹிம்ஸை நெறியாகிய போர் நெறியிலும் ஒத்துழைத்து நேச தேசத்தினருக்கு வெற்றி கிடைக்கச்செய்துவிட்டால், இந்தியாவைச் சுய ஆட்சி தானாகவே தேடி வந்து அடையும் என்று உபதேசித்தவர், மும்முரமாகச் சர்க்காருடன் அஹிம்ஸா தர்மப்போர் தொடுக்க முயன்றுவிட்டார். இந்திய அரசியல் தலைமை தானாகவே காந்தியடிகளைத் தேடி வந்துவிட்டது. அந்த 'முள்முடி'யைத் தரித்துக்கொள்ள அவர் பின்வாங்கவில்லை.

இந்தியாவின் வட கோடியில் உள்ள பஞ்சாப்—அமிர்த ஸரஸில் காங்கிரஸ் மகாசபை கூடிய பின்பு, தென்கோடியில் தமிழகத் திருநெல்வேலியில் இம்மகாநாடு கூடியதால், சென்னை மாகாணம் மட்டுமல்ல, மற்ற மாகாணங்களும் இம்மகாநாட்டு நிகழ்ச்சிகளைக் கவனிக்கத் தொடங்கின. அமிர்தஸரஸில் மக்கள் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டுமென்று தூண்டிய காந்தியடிகள் ஒத்துழையாமைத் திட்டத்தை வெளியிட்டதே ஒரு புரட்சிகரமான அரசியல் நிகழ்ச்சி. அராஜகப் புரட்சிச் செயல்களை முற்றும் கண்டித்து அந்த இயக்கத்தையே கொன்றுவிட்ட அஹிம்ஸா தர்மமூர்த்தி, அதைக்காட்டிலும் புரட்சிகரமான ஓர் இயக்கத்தைத் தொடங்கிவிட்டார் அல்லவா?

ஆனால் சர்க்காருடன் ஒத்துழைப்பே உதவாதென்று வாதாடிய ஸ்ரீ சித்தரஞ்சன தாஸர் போன்ற பெருந் தலைவர்கள் காந்தியடிகளின் ஒத்துழையாமையை இப்போது எதிர்க்கத் துணிந்தார்கள். ஓரளவு ஒத்துழைத்தே காரியசித்தி பெறவேண்டுமென்று திலகர் பெருமானும் அபிப்பிராயப்பட்டார். அனிபெஸன்ட் அம்மையாரும் ஒத்துழையாமைத் தத்துவத்தை ஒப்புக்கொள்ளவில்லை.

அந்நாளில் முஸ்லிம்களின் 'கிலாபத்' கிளர்ச்சி என்ற ஒரு கிளர்ச்சியும் காங்கிரசுடன் ஒத்து நடைபெற்றுவந்தது. 'கிலாபத்' கிளர்ச்சி 'துருக்கிக்கு ஆபத்து வந்துவிட்டதே!' என்று அதற்கு அனுகூலமாக நடைபெற்ற முஸ்லிம் கிளர்ச்சி முதலாவது உலக மகா யுத்தத்தில் துருக்கி ஜெர்மனியோடு சேர்ந்திருந்து தோல்வியுற்றது. துருக்கி சுல்தானை காலிப் இஸ்லாம் மதத்திற்கும் தலைவர் என்று கருதப்பட்டதால், துருக்கி விஷயமாக இந்திய முஸ்லிம்களும் தங்கள் அனுதாபத்தையும் ஆதரவையும் வெளியிட்டார்கள். அத்தகைய 'கிலாபத்' கிளர்ச்சி நடைபெற்ற அந்நாளில் இந்துக்களும் முஸ்லிம்களும் விசேஷ ஒற்றுமையுடன் தேசத்தொண்டு ஆற்றியது போலத் தோன்றியது. அக்காலத்து இந்து — முஸ்லிம் ஒத்துழைப்போடு, இக்காலத்து பாக்கிஸ்தான் சச்சரவுகளை ஒப்பிட்டுப் பார்த்தால், 'சிற்சில அம்சங்களிலாவது நாம் முன்னேற்றத்திற்கு மாறாகப் பின்னோக்கி இறங்கியிருக்கிறோம்!' என்று சொல்லத் தோன்றும்.

எப்படிப் பார்த்தாலும், ஒரு முதல்தரமான அரசியல் நெருக்கடி திருநெல்வேலி மகாநாட்டில் அலசி ஆராயப்படும் என்று அரசியல் அறிஞர்கள் மட்டுமல்ல, பொதுமக்களான பத்திரிகை-வாசகர்களும் அறிந்துகொண்டார்கள். மகாநாட்டுக்குத் தலைவர் அதுவரை அட்வகேட் ஜெனரலாக இருந்து அதை சமீபமாக அப்பதவியை உதறித்தள்ளிவிட்ட மேதாவியான ஸ்ரீ எஸ் ஸ்ரீநிவாஸ ஐயங்கார் என்று தெரிந்ததும், 'அந்தப் பெரு நெருக்கடியை அந்தப் பெரியார் எப்படிச் சமாளிக்கப் போகிறார், பார்க்கலாம்' என்ற ஆசையும் ஜனங்களுக்கு ஏற்பட்டது.

காந்தியடிகளின் ஒத்துழையாமைத் திட்டமே சட்டவிரோதம் என்று ஏற்கெனவே வாதாடிய சட்டநிபுணர், சர்க்கார் அளித்த பட்டம் பதவிகளை விட்டுவிட வேண்டுமென்று காந்தியடிகள் சொன்னதும் தம்முடைய சி.ஐ.இ. பட்டத்தைத் துறந்து மாகாண மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க ஒப்புக்கொண்டார் அல்லவா? அது ஜனங்களுக்கு அதிசயமாகவும், 'நல்லகாலம் பிறந்துவிட்டது' என்பதற்கு ஓர் அறிகுறியாகவும் தோன்றியது.

## மகாநாட்டின் வைபவம்

திருக்குற்றாலத்தில் சாரல் கட்டி 'ஸீஸன்' ஆரம்பமாகிவிட்டது. திருநெல்வேலி ஜில்லா முழுமையும், வெப்பம் மாறிக் 'குளு குளு' வென்று குளிர்ந்து, தலைவர்களையும் பிரதிநிதிகளையும் மற்ற விருந்தினர்களையும் வரவேற்றது. மகாநாடு, சாரல் ஆரம்பித்தபின் ஜூன் மாதக் கடைசியில் கூடியது. சாரலை ஒட்டிக் குற்றாலக் குளிர்வாசத்திற்கு வந்திருந்தவர்களும் மகாநாட்டுக்கு வந்தார்கள். "குளிர்ந்த உள்ளத்துடன் தலைவர்கள் அரசியல் நெருக்கடியைத் தீர்த்து நாட்டை வாழ்விப்பார்கள்" என்ற எண்ணத்துடன் தேசபக்தர்கள் திருநெல்வேலி மகாநாட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

வரவேற்புக் கழகத் தலைவர் திருநெல்வேலி வழக்கறிஞர்களில் பிரதானரும், எனது பேரன்பர்களில் ஒருவருமான ஸ்ரீ சாது கணபதி பந்துலு அவர்கள், பிரதிநிதிகள் முதலானவர்களின் சாப்பாடு முதலான வசதிகளுக்கு அவர் முதல் தரமான ஏற்பாடுகள் செய்திருந்தார். அவர்களெல்லாம் தங்குவதற்கு வசதியான தனித்தனி ஜாகைகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. அவையெல்லாம் கலியாண வீடுகள்போல் அலங்கரிக்கப்பெற்றிருந்தன. தமது அருமைப் புதல்வியின் திருமணத்திற்கு எவ்வளவு சிரத்தையுடனும் உத்ஸாகத்துடனும் ஏற்பாடுகள் செய்தாரோ அவ்வளவு சிரத்தையுடனும் குதூகலத்துடனும் பந்துலுகாரு அந்த மகாநாட்டுக்கும் தக்க ஏற்பாடுகள் செய்திருந்தார்.

திருநெல்வேலித் தெருக்களெல்லாம் தோரணங்களாலும், வரவேற்புக் கமான்களாலும், 'தேசீயத் திருமந்திரங்கள்' என்று சொல்லத்தக்க மகா வாக்கியங்களாலும் அலங்கரிக்கப்பெற்றிருந்தன. திருநெல்வேலி நகரமும் ஜங்ஷனும் ஒரு 'தேசீயத் திருமணம்' கொண்டாடப் போவதுபோலவே தோன்றியது.

அனிபெஸன்ட் அம்மையார், திரு வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார், 'ஹிந்து' பத்திராதிபர் கஸ்தூரி ரங்கையங்கார், 'சுதேசமித்திரன்' பத்திராசிரியர் ஏ. ரெங்கசாமி ஐயங்கார், திரு எஸ். சத்தியமூர்த்தி, திரு ஸி. பி. ராமசாமி ஐயர் முதலானவர்களை வரவேற்புக் கழகத் தலைவர் மாப்பிள்ளை-வீட்டாரைப்போல் வரவேற்று உபசரித்தார். கால்-சராயும் சட்டையும் தலைப்பாகையு

மாய் வந்த மகாநாட்டுத் தலைவரான திரு எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்காரை வரவேற்புக் கழகத் தலைவரான சாது கணபதி பந்துலு ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து அவருக்கு ஏற்படுத்தியிருந்த ஜாகையான எட்டையபுரம் ராஜாவின் பங்களாவரை கீத வாத்திய விநோதங்களுடன் ஊர்வலமாக ராஜோபசாரத்துடன் ஒரு மாப்பிள்ளை-ராஜாவை அழைத்துப் போவதுபோல் அழைத்துச் சென்றார்.

சாரல்-தூற்றல்களால் வானமும் பூமியைக் குளிர்வித்தது. அந்தத் தூற்றல்கள் ஒரு பெருந் திருமணவைபவத்தை முன்னிட்டுப் பனிநீர் தெளிப்பதுபோலத் தோன்றின. தாம்பிரபருணியாற்றிலே 'கங்காப்பிரவாகமே வந்துவிட்டதோ?' என்று வந்தவர்கள் எல்லாம் வியக்கும்படி அவ்வளவு ரம்மியமாகவும், ஆனந்தமாகவும் சாரல்-பிரவாகம் ஓடிக்கொண்டிருந்தது. ஒரு நாணயத்தைப் போட்டுவிட்டாலும் அது தெரியும்படி அவ்வளவு தெளிவாய் இருந்தது நீரோட்டம். மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்தவர்கள் வேண்டிய போதெல்லாம் அக்குளிர்நீர்ப் பிரவாகத்திலே—அந்தத் தாம்பிரபருணிக் கங்கையிலே—நீராடி நிர்மலராகி, மகாநாட்டு நடவடிக்கைகளைக் கவனித்து வந்தனர். உண்மையில் அது மகாநாட்டின் வைபவமாக மட்டும் இல்லை. கலியாண கோலாகலமாகவே இருந்தது.

தலைவர்கள் பலரும் நீளமான அங்கிகளுடனும், தலைப்பாகைகளுடனும் விஜயம் செய்து மாப்பிள்ளைகள்போல் மேடைக்கு வந்து ஆங்கிலத்தில் பேசியதும், அவர்களில் சிலர் வெள்ளையர்கள் போல் ஆங்கில வார்த்தைகளை உச்சரிக்க முயன்றதும் இன்று நடைபெற்றால் வேடிக்கையாகத் தோன்றியிருக்கும்,— அன்றோ ஆனந்தமான காட்சிகள்.

அந்தப் பெரிய பந்தல் மாவிலைத் தோரணங்களாலும் வாழை முதலியவற்றாலும் அழகாய் அலங்கரிக்கப்பட்டிருந்ததும், அதை ஒரு கலியாணக் கொட்டகைபோல் தோன்றச் செய்தது. சுமார் 16,000 மக்கள் பந்தலில் அமர்ந்து, 'ஒலி பரப்பி' இல்லாத அந்நாளில், பிரசங்கங்களைக் கேட்டு இன்புற்ற அக்காட்சியைத்தான் என்னென்பது? பலரும் ஏதோ ஒரு பெரிய சங்கீதக் கச்சேரியோ, சதிர்க் கச்சேரியோ பார்ப்பதுபோல் அவ்வளவு நிசப்தமாயிருந்து அவ்வளவு ரஸமாய் அந்தச் சொற்பொழிவுகளையும், அரசியல் விவகாரங்களையும் ரஸித்து அனுபவித்தார்கள்.

உயரமான மேடையொன்று, தலைவர்களுக்கும் சொற்பொழிவாளர்களுக்கும் அழகான நாற்காலி மேஜைகளுடன் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. பிரதிநிதிகள் முதலானவர்களுக்கும் நாற்காலிகள் உண்டு. மற்றவர்கள் தனிக் 'காலரி'களில் அமர்ந்து நடவடிக்கைகளைக் கவனித்தனர்.

இம் மகாநாடு கவனித்த முக்கியமான விஷயம் 'காந்தியடிகளின் ஒத்துழையாமைத் திட்டத்தை ஆதரிப்பதா, இல்லையா' என்பதுதான். பெஸன்ட் அம்மையார், சாஸ்திரியார் முதலானவர்கள் ஒத்துழையாமைத் திட்டத்தைக் கண்டித்துப் பேசினார்கள். எனினும் மகாநாடு காந்தியடிகளுக்கே வெற்றியாக முடிந்தது. இம்மகாநாட்டில் அப்போது இளைஞராக இருந்த சத்தியமூர்த்தியின் வீரப் பேச்சு மிகவும் சோபித்தது. இம் மகாநாட்டின் விளைவாக மிதவாதிகள் காங்கிரஸிலிருந்து பிரிந்து போய் விட்டார்கள்.

மகாநாடு இப்படிக் கோலாகலமாக நடந்தும், ஜனங்களுக்கெல்லாம் ஒரே ஏமாற்றம்தான். திலகர் வரவில்லை என்பதுதான் காரணம். "கலியாண தடபுடல்களெல்லாம் நன்றாகத்தானிருந்தன, அழகாய் இருந்தன, ஆனந்தமாய் இருந்தன; ஆனால் கலியாணம் நடைபெற்றதாகத் தோன்றவில்லையே!" என்று வெதும்பின, திலகரை எதிர்பார்த்திருந்த திருநெல்வேலியும், திருநெல்வேலியில் திரண்டிருந்த தமிழகமும்.



## ஞாபகப்படுத்துகிறோம்



"சுதேசமித்திரன்" வாரப் பதிப்பில் வெளிவரும் கதைகள், கட்டுரைகள், கவிதைகள் இவற்றில் வரும் பெயர்கள், சம்பவங்கள் முதலியன எவரையும் குறிப்பிடுவன அல்ல. அவை முற்றிலும் கற்பனையே.

—ஆசிரியர்.




*அன்புள்ள அம்மாவுக்கு அலமு அநேக தண்டம் ஸமர்ப்பித்த விஞ்ஞாபனம்.*

'இந்த ரேஷனில் இத்தனை பேர்கள் கஷ்டப்படும் போது ஒரே ஒரு ஆத்மா சந்தோஷப்படுகின்றதென்றால் அது நம்ம சுந்தரம்தான்' என்று பெரிய மாமா சொல்வாரே ஞாபகம் இருக்கிறதா? தன்னுடைய சொந்தக் குழந்தைகள் வயிறு நிறையச் சாப்பிட்டுப் பார்க்கச் சகிக்கமாட்டார். எதற்காகத் தனக்கு பகவான் இத்தனை குழந்தைகளைக் கொடுத்தார் என்றுகூட சில சமயங்களில் அவர் நினைப்பதுண்டு. ஒரு நாளாவது நல்ல ஆகாரமாக திருப்தியாக வயிறு நிறைய அவர் சாப்பிட்டு யாரும் பார்த்ததில்லை. எதற்காக பந்துக்கள் என்று ஒரு கூட்டம் இருக்கிறதென்று அவர் எத்தனை தரம் சொல்லியிருக்கிறார். ஏன்? அடிக்கடி சாப்பிட வந்துவிடுவார்களாம். பெரியவன் கிச்சா முதற்கொண்டு கடைக்குட்டி பங்கஜா, பட்டு வரையில் ஒத்தராவது கிழிசல் இல்லாமல் ஒரு நல்ல துணி ஒரு நாளில் உடுத்திக்கொண்டது கிடையாது. பாவம்! சித்தியும் ஒரு நல்ல புடவை வாங்கிக் கொடுக்கும்படி கரடியாய்க் கத்தி விட்டுப் பிராணனை விட்டாள். அவள் இருந்தவரையில் பாவம் ஒரு நாளாவது ஊசியும் நூலும் தொடாமல் இருந்தது கிடையாது. எப்பொழுது பார்த்தாலும் குழந்தைகள் பாவாடையையும் தன் புடவையையும் தைத்தபடிதான். பகவானுக அதிக செலவு ஏற்படாமலிருக்க நம்மீது கருணை வைத்து இந்த ரேஷன் என்று ஒன்றை ஏற்படுத்தினரே அவருடைய நாமாவை எத்தனை தரம் ஜபித்தாலும் போருது. (அப்பொழுதுகூட அதற்காக ஒரு தேங்காய் உடைப்பதாக வேண்டிக் கொள்ளமாட்டார்) என்று ஆச்சர்யப்பட்டுக் கொள்வார். ஒரு பண்டிகையாவது கொண்டாடமாட்டார். இன்று அம்மாஞ்சியின் பிள்ளை இறந்த நாள், இன்று அத்தையின் பேரன் இறந்த நாள் என்று கதையாவது சொல்லி நிறுத்திவிடுவார்.


...ஊசியும் நூலுமாய்...

என்ன யோசிக்கிருய்? எல்லாம் நம்ம சித்தப்பாவைப் பற்றித்தான் சொல்கிறேன். நம்ம அப்பா ஸாது, ஒன்றுந் தெரியாதவர், சண்டையென்ருல் பயந்துகொண்டு ஓடிவிடுவார் என்று, பிதுரார்த்தமான சொத்தையெல்லாம் மோசம் செய்து நல்ல நல்ல நிலத்தையெல்லாம் தன்னுடைய பாகத்துக்கு வைத்துக்கொண்டாரே, பாவம் அப்பொழுதுகூட அப்பா என்ன சொல்வார், என்னை ஏமாற்றுவதைப்பற்றி எனக்கு ஒன்றும் கவலையில்லை. அக்கிரமமாக சம்பாதித்த சொத்து நிலைக்காது என்று பெரியவர்கள் சொல்வார்கள். அப்படியெல்லாம் ஒன்றும் நேராமல் அவன் நன்ருக இருக்கும்படி பெருமாள் கிருபை பண்ண வேண்டும் என்று சொல்வாரே, அப்படி அவரை ஏமாற்றிச் சம்பாதித்தார். ஊரில் தேர் திருவிழா என்று ஏதாவது வந்தால் அதற்கு ஒரு வாரம் முன்னுலேயே எங்காவது ஊருக்கு மூட்டை கட்டி விடுவார். இல்லாவிட்டால் வீட்டுக்கு யாராவது சாப்பிட வந்து விடுவார்களே! மூன்றெழுத்தையும் காற்றில் பறக்க விட்டுவிட்டு, வயிற்றையும் வாயையும் கட்டிப்போட்டு என்னதான் பணத்தை சேர்த்தாரடியம்மா! நீகூட எத்தனையோ தரம் 'என்னதான் இருந்தாலும் அவர் சமத்து சமத்துதான். ஸம்ஸாரிகள்

அப்படியிருந்தால்தான் முடியும், இல்லாவிட்டால் இன்றைக்கு நாலு காசு அகப்படுகிறதே என்று செலவழித்துவிட்டால் அப்புறம் என்னத்தையடியம்மா செய்கிறது!' இன்றைக்குச் சேர்க்கிறார். நாளைக்கு குழந்தை குட்டிகள் சௌக்யமாக இருக்கப் போகிறார்கள்' என்று அவருடைய பணம் சேர்க்கும் சாமர்த்தியத்தைப் பற்றி ஆச்சர்யமாய்ச் சொல்லிப் புகழ்ந்து கொள்வாய். 'ஆமாம்! இன்றைக்கு கௌரவமாய் இருக்க உபயோகப்படாத அந்த சொத்து இருந்தென்ன, இல்லாவிட்டால் என்ன? தீபாவளிக்கு ஊரிலுள்ள பசங்களெல்லாம் புதுப் பாவாடையும் புதுச் சொக்காயுமாகப் போட்டுக் கொண்டு வாசலில் அழகாக வாருங்கள். நம்ம சித்தப்பாவாத்துப் பசங்கள் மாத்திரம் பாவாடைகளில் நூற்றுஎட்டு ஜால்ராக்களுடனும், சொக்காய்களில் இருபத்தெட்டு பொத்தல்களுடனும் போகுங்கள். 'மானம் போகிறது, அப்புறம் யாருக்கடி அம்மா அந்த சொத்து?' என்று நான் சொன்னால் 'ஆமாம் பெரிய மனுஷி ரொம்ப தெரியும் உனக்கு. நாம்தான் அசடுகள் செலவழிக்கிறோம். எல்லாரும் அப்படி இருந்து விடுவார்களா என்ன? என்று சொல்வாயே. என்ன ஆயிற்று பார்த்தாயா கடைசியில்!

கோடியாத்து மாமாவுக்கு ஒரு எண்ணூறு ரூபாயைக் கொடுத்து விட்டு, வட்டிக்கு வட்டி, வட்டிக்கு வட்டி என்று எழுதி எழுதி வாங்கிக் கொண்டே வந்து ஐயாயிரம் ரூபாய் பாக்கியில் கொண்டு விட்டார். கோடியாத்து மாமாவும் பணத்தைக் கேட்காமலிருந்தால் போறும் என்று இவர் எந்த மாதிரி எழுதிக் கொடுக்கச் சொன்னாரோ அந்தமாதிரி எல்லாம் எழுதிக் கொடுத்துக் கொண்டு வந்தார். கடைசியில் நல்ல மஞ்சள்



......மூட்டை கட்டி விடுவார்......

கடிதாசியாகக் கோர்ட்டில் நீட்டி விட்டார். கனவு கண்டு கொண்டிருந்த ஐயாயிரம் ரூபாயும் ஐந்து பைசாவுக்குக்கூட வழியில்லாமல் போய் விட்டது. புத்திசாலியாக இருந்திருந்தால் தன் சாமர்த்தியத்தை அதிலேயே தெரிந்து கொண்டிருந்திருக்கலாம்.

அப்படியெல்லாம் தெரிந்துவிடுவதானால் அப்புறம் லோகம் ஏன் இப்படி இருக்கிறது? அப்புறம் பாங்கியில் பணத்தைப் போட்டுவிட்டு எப்படி ஏமாறுவது? சரி அதிக வட்டிக்கு வெளியில் பணம் கொடுத்தால்தான் இப்படி ஆகிறது. சொற்ப வட்டியாக இருந்தாலும் பாங்கியில் போட்டு வைப்பதுதான் நல்லது என்று......... பாங்கியில்போட ஆரம்பித்தார். அந்தப் பாங்கியும் திவால் ஆய்விட்டதாம். ஒன்றா இரண்டா? இருபதினாயிரம் ரூபாய். பாவம், நினைத்துக் கொண்டால் வயிற்றெரிச்சலாய்த்தான் இருக்கிறது.

நல்லவேளை, முந்தாநாள்தான் மாமனார்கூட அந்தப் பாங்கில் ஆயிரம் ரூபாயைக் கொண்டு கட்டுவதற்கிருந்தார். ஏதோ நல்லகாலம், கோபுவுக்கு சேலத்தில் முதலில் செலவுக்காக இருநூறு ரூபாயைக் கொடுத்துவிட்டு, மீதியை அடுத்தவாரம் கொண்டு கட்டிக் கொள்ளலாம் என்று நிறுத்திவிட்டார். பெருமாளாகத்தான் அந்த மாதிரி யோசனை கொடுத்தார் என்று சொல்லவேண்டும்.

இதெல்லாம் எதற்காகச் சொல்லவந்தேனென்றால், சித்தப்பாவின் கஷ்டம் ஒரு பக்கம் இருக்கட்டும், உலகத்தினுடைய அதிவிசித்திரமான போக்கைப்பற்றித்தான் குறிப்பிட வந்தேன். உலகத்திலே மனிதன் ஒரு நிமிஷமாவது நிம்மதியாக இராமல் அவனுக்கு ஆபத்தை விளைவிக்கக்கூடிய சம்பவங்கள் என்னென்ன உண்டோ அவைகளெல்லாம் பலவித ரூபங்களில் புற்றிலிருந்து ஈசல் கிளம்புகிற மாதிரி உண்டாகியிருக்கிறது. அதிகம் வளர்த்தாமல் சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால் கொலை, கொள்ளி, சூறை இதுதான் இன்றைய உலகம். இதற்கும் மீறி பாங்குகளில் கொஞ்சநஞ்சம் ஆபத்துக் காலத்துக்குப் பணத்தைப் போட்டு வைத்தானானால் திடீரென்று பாங்குகள் திவால்.

இவைகள்தான் ஸ்திரமில்லை போகட்டும். சாச்வதமானது என்று கருதி...இனம் கிராமத்தில் கால் பங்கு வாங்கினார் சித்தப்பா. அதற்கும் ஏதோ சட்டம் வருகிறதாம். அதுவும் நிலைக்காது போலிருக்கிறது. பின் என்னதான் செய்வது என்று கேட்கிறாயா? சிரோமணி சொல்கிறமாதிரி ஏதோ ஒரு பிரளயத்துக்குத்தான் இந்தமாதிரியெல்லாம் வந்து கொண்டிருக்கிறது. ஏதோ கையில் நாலு காசு அகப்பட்டால் அதை நல்வழியில் அவ்வப்பொழுது செலவு செய்து, இருக்கிறவரையில் நாலுபேருக்குக் கௌரவமாக இருந்துவிட்டுப் போவதுதான் புத்திசாலித்தனம். இல்லாவிட்டால் சித்தப்பா கதிதான். நான் சொல்வதெல்லாம் இதுதான்.

மனுஷ்யனுடைய சாமர்த்தியத்தில் ஒன்றுமில்லை. எல்லாம் பகவானுடைய கையில்தான் இருக்கிறது. இதைச் சொன்னால் பெரிய வேதாந்தி அது, இது என்று என்னைப் பரிகாசம் செய்ய வந்துவிடுகிறாய். அதென்னமோ என்னைப்பற்றிய வரையில் நான் கொண்டுள்ள தீர்மானம் இதுதான். பணம் நாளைக்கேவரும். ஆனால் இந்த வயதும் பருவமும் அப்படியே இருக்காது. அந்தந்த காலத்தில் அததை அனுபவிக்க வேண்டியதை அனுபவித்து விடவேண்டியதுதான். பந்து பரிபாலனத்தையும் விடாமல் செய்ய வேண்டியதுதான். அதற்குமேல் பகவான் விட்ட வழியாகிறது, பார்த்துக் கொள்ளலாம்.

அதெப்படியாவது போகிறது. இன்னொரு முக்யமான விஷயம் சொல்ல மறந்தே போய்விட்டேனே. கோபுவுக்கு சேலத்தில் ஒரு பத்திரிகையின ஆசிரியர் வேலை ஆகியிருக்கிறது என்று முன் கடிதத்திலேயே எழுதியிருந்தேனே ஞாபகமிருக்கிறதா? நாளை தினம் கோபு சேலத்துக்குப் போகப் போகிறார். அங்கு போனதும் வீடு பார்த்துக்கொண்டு விமலாவை அழைத்துக்கொண்டு போகப்போகிறார். இதில் என்ன ஆச்சர்யம் என்கிறாயா? விமலாவின் தாயாரும் இவர்களுடன் சேலத்தில் இருக்கப் போகிறார்களாம். பாவம்! அவளுக்கும் வேறு திக்கு இல்லை. இருக்கட்டும். யாரும்வேண்டாமென்று சொல்லவில்லை. மன்னியும், அண்ணாவும் இங்கே இருக்கிறார்களென்று கணக்குவாத்தியாராத்து மாமியுடனும் எதிரகத்து மாமியுடனும் விமலா சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாளே! இப்பொழுது இதற்கு என்ன சொல்கிறாளாம் என்று கேட்கிறேன். எல்லாம் தனக்கு வந்தால்தான்



............சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாளே............

தெரியும். விமலா என்பதென்ன? உலகமே அப்படித்தான் இருக்கிறது. சாதக பாதகத்தைக் கொஞ்சம்கூட யோசனை செய்யாமல் எதையாவது உளறிக் கொட்டிவிட வேண்டியது, பின்னிட்டு கஷ்டப்பட்டுக்கொள்ள வேண்டியது.

தீபாவளிக்கு நீ வாங்கிக் கொடுத்தனுப்பிய சேலை ரொம்ப நன்றாக இருக்கிறதென்று எல்லோரும் சொன்னார்கள். விமலாவுக்குக்கூட அதுமாதிரி ஒன்று 'இவரை' வாங்கச்சொன்னேன், அது தான் அசடாக இருந்தாலும் நாமும் அப்படி இருந்து விடலாமா?

இப்படிக்கு,

உன் அன்புள்ள,

அலமு.



# காய கல்பம்

கனல்



சாதுசக்கரர் அசையாமல் நின்றுகொண்டிருந்தார். ராணி ரத்னு கண்ணில் ததும்பிய நீரைத் துடைத்துக்கொண்டாள். சுநந்தா தந்தையை உயிருடன் இனித்தான் காணக் கிடைக்குமோ என்ற சந்தேகக் கடலில் வீழ்ந்தாள். காரியசித்தி வெற்றிமுகத்தைத்தனக்குள் எழுப்பிக் கொண்டான். ஒன்றுமறியாத மற்றவர்கள் வாழ்த்துக் கூறினுர்கள். மன்னர் சென்றுவிட்டார்! வக்ரநாஸன் அன்று உள்ளே சென்றவன், மஹாராஜாவுக்குச் சில உபதேசங்கள் செய்யத் தொடங்கினுன்.




"அச்சம் கூடாது; ஏக்கமே தலை காட்டக் கூடாது. தைரியத்துடன் நான் செய்வதை ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றுன்.

"சரி; அதன்படியே செய்வேன். அப்பொழுது தானே எனக்கு நன்மையுண்டாகும்"? என்றுர் அரசர்.

"சுரங்கத்தின் மேற்புறத்திலும் கீழ்ப்புறத்திலும் பல காவலர்களை நிறுத்தியிருக்கிறேன். தாங்கள் செய்ய வேண்டிய காரியங்களை அறிவித்தால் அவர்களிடம் நான் தெரிவித்து விடுவேன். ஒன்றுக்கும் கவலை வேண்டாம்" என்றுன்.

வக்ர நாஸன் இவ்வாறு கூறியது அரசருக்குத் தன் மீது நம்பிக்கை ஊன்ற வேண்டும் என்பதற்காகவே. அதை வளர்க்கப் பாடுபடுவதே அவனுடைய முதல் லட்சியமாக இருந்தது. நம்பிக்கை உண்டாக முடியாத காரியத்தைச் செய்யச் சூழ்ச்சி செய்திருக்கின்ற அவனுக்கு, மன்னரின் நம்பிக்கையைப்பற்றித் தானே கவலையிருக்கும்? ஆகவே முதலில் அதைத் தீர்த்துக்கொண்டான்.

"மருந்துகள் கொடுப்பேன்; நாளுக்கு நாள் உமது உடல் இளைக்கும்; பின்பு அது நீங்கிப் புதுத் தோலாகவும், புது உருவமாகவும் மாறும்; ஆகையினுல் நடுவிலே கலங்காதீர்கள். கலக்கமே காய கல்பத்துக்கு விரோதமாகும்" என்றுன்.

"வக்ர நாஸன் என் முன்னே இருக்கும்போது கலக்கமேது?" என்றுர் மன்னர்.

இப்படியாக இரண்டரை மாதங்கள் சென்றன. இந்தக் காலத்துக்குள் அவன் செய்திருந்த காரியம் ஒன்றுதான். அரசரின் உடலில் எலும்பு மாத்திரமே மிச்சமாக இருந்தது. அரண்மனைக்கு அனுப்பிய செய்திகளுள், "மஹாராஜாவின் உடல் நன்றுக இளைத்துவிட்டது. இனித்தான் புதுமை உண்டாகப் போகிறது." என்பதே கடைசியானது. இன்னும் பதினைந்தே நாட்களில் அவர் வந்துவிடுவார் என்ற எண்ணம் அரண்மனையைச் சேர்ந்த எல்லோரையும் களிப்பித்து வந்தது.

சாதுசக்ரரும் வக்ரநாஸனின் சம்மதத்தைப் பெற்றுச் சுரங்கத்துக்குள் சென்று மன்னரைப் பார்த்துவிட்டு வந்திருந்தார். அவருக்குச் சுரங்கத்துக்குள்போகும்போதே மகிழ்ச்சி கிடையாது. திரும்பி மேலே வரும்போது, மன்னருடைய நிலையைக் கண்ணுரக் கண்டதனுல் ஏற்பட்ட கலக்கம் அவர் முகத்தில் நன்கு வெளிப்பட்டுக்கொண்டுதானிருந்தது. அதை அவர் மறைக்க முயன்றுகொண்டிருந்தார்.

அன்றுதான் அசுவபாலனும் வந்தான். 'மன்னர் தம் மனத்தை இப்படி

## மகத நிர்வாகம்



சாதுசக்ரர் தம்மைத் தாமே அடக்கிக் கொண்டு அரசாங்க அலுவல்களைக் கவனிக்கச் சென்றார். இன்றைக்குப் பதினைந்தாவது நாள்தான் மன்னரின் நிலை தெரியவரும். அதே நாளில் அசுவபாலனும் படையெடுத்து வருவான்! அரசரைக் கவனிப்பதா? படை வீரர்களைத் திரட்டிப் போருக்கெழுவதா...? இந்தச் சிந்தனையில் ஒரு கணம் மூழ்கினார். பின்பு துணிவு கொண்டு தமக்கு நேர்மையாகத் தோன்றும் செயல்களிலெல்லாம் இறங்குவதென்ற முடிவுக்கு வந்தார்.

சேனாதிபதிக்குத் தகவல் சென்றது. காரிய சித்திக்கும் செய்தி விடுத்தார். ராணி ரத்னாவுக்கும் விஷயங்களை அறிவித்தார். அறிவிப்பு மாத்திரம் இல்லை; தேறுதலும் செய்வித்தார்.

அப்பொழுதெல்லாம் அவர் முகத்தில் காம்பீர்யம் பெருகி நின்றது. அவர் பராக்ரமம் நிறைந்த செயல்களைப் புரியும் சீலராகத் தோன்றினார். அவருடைய அந்த முகத்தில் மேலும், கருணையிருந்தது; கவலையிருந்தது; பரிதாபமிருந்தது! வஞ்சினம் இருந்தது...பல தன்மைகள் மனத்திலிருந்தும் முகத்தில் வெளிப்பட்டிருத்தலை அமைதியென்ற அவருடைய இயற்கைத் தன்மை திரையிட்டு மறைத்திருந்தது!

திகைக்காமல், தயங்காமல் காரியங்களில் இறங்கிய அவரைக் காணும் அதிகாரிகள் யாவரும் அதிசயித்தார்கள். சாதுசக்ரர் இல்லையென்றால், இத்தனை நாட்களில் மகதம் வெறும் இடுகாடாகியிருக்கும் என்று சிலர் சொல்லிக் கொண்டார்கள். மஹாராஜாவுக்கு இப்படி மதி கெட்டுப் போகக்கூடாது என்று சிலர் கூறினர். இன்னும் சிலர், ராணி ரத்னப்ரபாவின் மாங்கல்யம் கெட்டியாயிருக்க வேண்டும்'' என்றனர். வேறு சிலர், "பச்சைப்பிள்ளை சுநந்தாவுக்குக் கல்யாணங்கூட முடியவில்லை; மஹாராஜாவுக்குத் தலையிலே என்ன எழுதியிருக்

விடில், அங்கம் இத்தகைய செருக்குடன் தலை நிமிர்ந்துபோகுமா? அசுவபாலனும்தான் இவ்வளவு தைரியத்துடன் பேசிவிட்டுப் போவானா?'' என்ற சிந்தனையில் ஈடுபட்ட போது அவர் மனத்தில் மேலே கூறிய சம்பவங்களில் அவர் பார்த்திருந்தவைகள் எல்லாம் நினைவுக்கு வந்தன......

வக்ரநாஸன் மஹாராஜாவைக் கெடுத்து விடுவான் என்பது அவர் யூகம்! ஆனால் அது உண்மைதான் என்பதில் அவருக்கு நம்பிக்கை யுண்டாகவில்லை. வக்ரநாஸனுடைய சூழ்ச்சித் திட்டம் அவருக்குத் தெரியாது. ஏன், அவனுக்கே பூரணமாகத் தெரியாதே! வேலைக்காரன் மடிந்ததும் அவருக்குத் தெரியாது. மற்றவைகள் யாவையும், கண்டும் கேட்டும் அறிந்திருந்தார். ஆகவே அவைகள்மாத்திரம் நினைவுக்கு வந்தன. மன்னரின் அறியாமையைக் கருதி மேலும் அவர் இரங்கினார். இரண்டரை மாதங்கள் தீர்ந்தன என்று தமக்குள் கூறிக்கொண்டார்! அப்பொழுது ஒரு பெருமூச்சு வெளி வீசியது.

விதம் என்பதற்கேற்ப பலர் பலவாறு நினைத்தனர். எல்லோருக்கும், ஒற்றுமைப்பட்டிருந்த ஓர் எண்ணம் மாத்திரம் உண்டு. அது, "அமரசிம்மர் குமாரராகாவிட்டாலும், பழைய நிலையில் திரும்பிவந்து சௌக்கியமாக இருந்தால் போதும்" என்ற எண்ணம்தான்.

எல்லோரும் ஐந்துபக்ஷங்களைப் பொறுமையுடன் பொறுத்து வந்தனர்; இந்த ஆறுவது பக்ஷத்திலே ஆறாத துயரங்கள் நேரிட்டுவிட்டால் என்ன செய்வது என்ற ஏக்கத்தில் அழுந்திப் போனார்கள்.



நாட்டிலே வீட்டிலெல்லாம் தேவிபூஜை, தேவபூஜை எல்லாம் மன்னருடைய நலத்தை உத்தேசித்தே நடத்தப்பட்டன. அமரசிம்மர் குடிகளிடத்தில் செலுத்தியிருந்த கருணையே அதற்கு காரணமாகும். பாமரஜனங்கள் பெரியோர்களைக் காட்டிலும் இன்னும் அதிகமாக மன்னரைக் கொண்டாடினார்கள். பெரியோர்களோ தம் கடமையை உத்தேசித்துக் கட்டுப்பாட்டுடன் மன்னரின் சுபீட்சத்தை நாடினார்கள். ஏனென்றால் அமரசிம்மர் மீது அவர்களுக்கு இருந்த மதிப்பிலே ஓரளவு குறைந்துவிட்டது. காயகல்பமென்ற துறையில் கருத்தைச் சிதறவிட்ட காவலரை அவர்கள் எப்படிப் பெரிதும் மதிப்பார்கள்! ஆனால், அப்பெரியவர்கள் எல்லாம் அறிந்தவர்கள்! காலசக்கரத்தின் சுழற்சிக்குக் காசினிக்கரசனும் கட்டுப்பட்டவன்தானே என்பதை நன்கு அறிந்த அவர்களும் இறைவனையே பிரார்த்தனை புரிந்தார்கள்.

இவ்வாறாக அகன்ற இரண்டரை மாதங்களுக்குப்பின் இடிமேல் இடியென வந்து தாங்கிய அசுவபாலனின் கொடுஞ் சொற்கள் அவர்களையும் கலக்கின.

அப்பொழுது, அவர்களுக்கும் ஒரு வீர உணர்ச்சி உண்டாயிற்று. யுத்தம் புரிவதில் விருப்பம் மிகுந்தது. தம் நாட்டுப்பற்று அதிகமாயிற்று. ஆகவே, நாடு முழுதும் பதினைந்தாம் நாளை எதிர்பார்த்ததில் வியப்பில்லையல்லவா?

சேனாதிபதி வந்து சேர்ந்தான். சாதுசக்ரர் உடனே ராணுவங்களைக் கவனிக்குமாறு பணித்தார். காரியசித்தி அங்கு வந்து நின்று, சாதுசக்ரரை 'விஷயம் என்ன' என்று சாவதான

துக்கொண்டுவரும்போது, மகதம் நன்கு தூங்கிக் கொண்டிருக்குமா?" என்றார் மதியூகி அமைச்சர்.

"வேண்டாம்! அப்பொழுதே நான் நினைந்தேன். அங்கதேசத்துக்குச் சுதந்திரம் வழங்கி விடலாமென்பதே என் எண்ணம்! அவ்வாறு செய்தால் இப்பொழுது இந்த யுத்தம் ஒன்று ஏற்படாது! மஹாராஜாவைக் கவனிக்கலாம்!"

"மஹாராஜாவை நீரும், நானும் கவனித்துவிட்டோம். இனி வக்ரநாஸன் நன்கு கவனித்துக்கொள்வான்! இறைவன் அருள்புரிவார்!" என்று கூறிய சாதுசக்ரர் காரியசித்தியைப் பார்த்து "மகதத்தின் புகழ் மங்கப்பார்க்கிறீர்களா?" என்றும் கேட்டார்.

"சாதுசக்ரரே! உமக்குத் திறமையிருந்தால் நடத்தும்! அதில் எனக்குத் தடையில்லை. ஒரே காலத்தில் பல காரியங்களை நிர்வாகம் செய்வதற்கு முடியாதே" என்றான்.

"நிர்வாகிகளே மந்திரிப்பீடத்தில் அமர வேண்டுமல்லவா? இது உமக்கே தெரியும்!" என்று குறு நகையும் பெருமிதமும் தோன்றக் கூறினார் சாதுசக்ரர்.

உடனே சாதுசக்ரர் "மகதத்தை அசைக்க எந்த அரக்கனாலும் முடியாது" என்று கூறித் துணிவுடன் தம்மிடம் சார்ந்தார்.

படைகளின் பெருக்கத்தைச் சேனாபதி கவனித்தான். ராஜ்யலக்ஷ்மியும், யுத்த மடந்தை கொற்றவையும் பூரித்திடுமாறு மகதத்தை



# குண்டணை



அசுவபாலனுடைய வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்த அருணாவும், சித்ரமாதாவும், அவன் வந்து விட்டான் என்பதைக் கேட்டதும் மகிழ்ச்சி கொண்டார்கள். வந்தவன் அருணாவைப் பார்க்க உடனே நினைப்பான் என்று சித்ரமாதா நம்பியிருந்தாள். ஆனால் அரசர் வேறு வழியில் தம் குமாரனைத் திருப்பி விட்டார் என்பது அவளுக்குத் தெரியவில்லை. ஆதலின், அவள் அருணாவைத் தேற்ற முடியாமல் திகைத்தாள்.

தன் மனத்துக்கு நிம்மதியான ஒரு செயல் நடந்தால்தான் இனி அவள் அருணாவைப் பார்ப்பாள் என்ற நிலையும் வந்துவிட்டது. உடனே அவள் அந்த இடத்தை விட்டு நீங்கினாள். நேராக அரண்மனைக்குச் சென்றாள். அசுவபாலன் அங்கிருப்பதைத் தெரிந்துகொண்டாள்.

தான் எப்படியாவது அவனைப் பார்க்க வேண்டும் என்ற துடிப்புடன் அவனை நெருங்கும் போது, அரசர் தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தார். உடனே தான் மறைவாக நின்று நடப்பவைகளைக் கவனிக்கலானாள்.

அரசர் குமாரனிடம் பேசலானார்.

“மகனே! உடனே சென்று ராணுவத்தை விருத்தி செய்! சேனாதிபதியைத் துரிதப்படுத்து! உனக்குச் சர்வாதிகாரமும் கொடுத்தேன். போ. ராணுவ அபிவிருத்திக்குப் பின்பே உன் லட்சியம் நிறைவேற முடியும்! எண்ணித் துணிந்த கருமத்தைச் செவ்வனே செய்யாவிட்டால் இழுக்கு ஏற்பட்டு அவமானமுண்டாகிவிடும்” என்று உற்சாகமூட்டும் சொற்களைக் கூறினார்.

அசுவபாலன் விரைந்து சென்றான். அரசர் அந்தப்புரத்துக்குச் சென்றார். சித்ரமாதா ஏமாற்றத்துடன் திரும்பினாள்.

‘மறு நாளாவது பார்ப்போம்’ என்று தீர்மானித்துக்கொண்டவளாய், அந்தப்புரத் தோழிகளுள் தனக்கு அந்தரங்கமான ஒருத்தியைப் பார்க்கச் சென்றாள். “அசுவபாலனுக்கு அவனுடைய தந்தையின் செயலைக் கூறிவிட வேண்டும். இதற்கென்ன வழி”? என்றாள். அசுவபாலனைக் கண்டு எந்தப் பெண்ணும் பேசக்கூடாது என்பது அரசர் கட்டளை. நீ அருணாவிடமிருந்து இங்கு வந்திருப்பதைக் கண்டால் உன் உயிருக்கே ஆபத்து உண்டாகிவிடும், உடனே நீ போய்விடு” என்றாள் அப் பெண்.

சித்ரமாதா வேறு வழியறியாதவளாய்த் திரும்பினாள். அருணாவைச் சென்று பார்க்கவும் இஷ்டமில்லை. “இறைவனே! என் அருணாவுக்கு ஒருவரும் துணையில்லையா?” என்று கேட்டவள் அப்படியே தளர்ந்துபோய்க் கீழே சாய்ந்தாள். அசதியும், காரியங்கள் கைகூடாமையும் சேரவே அவளுக்கு ஒன்றுமே சரியாகத் தோன்றவில்லை.

பின்பு கொஞ்ச நேரத்தில் ஒரு புது வழி புலப்பட்டது. “அசுவபாலன் எங்கு சென்றால் என்ன? அங்கேயே போய்ப் பார்ப்போமே” என்று தீர்மானித்தாள்.

அதே சமயத்தில், “மஹாராஜா மகிபாலர் வருகிறார்” என்று கூறியவளாய்ச் சேடி ஒருத்தி செய்தி கொண்டு வந்தாள். அவர் வருவதை மறைவாக நின்று கவனித்தாள் சித்ரா.

அரசர் பரபரப்பும், குதூகலமும் நிறைந்தவராகக் காணப்பட்டார். அருணாவிடம் நேராகச் சென்று, அங்கிருந்த சேடியரை அப்புறப்படுத்தினார்.

“குமாரி, இப்பொழுதாவது உன் உள்ளம் மாறியதா?” அருணா வெறுப்பும் சினமும் ஜ்வாலை வீசப் பார்த்தாள் அரசரை.

“குமாரி அருணா! அசுவபாலன் இனி உன்னை விரும்பமாட்டான். அது உன்னைக் கலக்குமென்றே நினைக்கிறேன்” என்றார். அப்பொழுதாவது அவள் பேசுவாள் என்று எண்ணியே அதைக் கூறினார் அரசர். அதற்கு அவள் பதில் பேசினாள். அவர் கூறிய விஷயத்திற்காக அவள் கலங்கவில்லை.

“சந்தோஷம்! அதேமாதிரி நீங்களும் என்னை விரும்பாமல் சென்றுவிடுங்கள்!”

“அப்படிப் பேசாதே! அங்கநாட்டுச் சிம்மாசனியாகும் பாக்கியத்தை உதறித் தள்ளாதே!”

“ஒரு பெண்ணை இப்படி வதைக்காதீர்கள்! சத்யமே உமது கண்ணாக இருக்க வேண்டும். தர்மமே உமது செயலாக இருக்க வேண்டும். கருணையே உமது கடமையாக இருக்கவேண்டும்! இந்த அக்ரமம் வேண்டாம்; வேண்டாம்! அழிந்துவிடுவீர்! ஒரு பெண்ணின் இதயத் துடிப்பு வீணில் போகாது!” என்று கொதித்துக் கூறினாள் குமாரி.

“எனக்கு உன் உபதேசம் தேவையில்லை, இதுவரை நான் செய்யாத அக்ரமம்? இல்லை.

இல்லே! இனிமேல்தான் செய்யப் போகிறேன் அக்ரமத்தை!'' என்று கூறி நெருங்கினுர் மன்னர்.

"ஐயோ!' என்று அலறினுள் அருணு. அச்சமயத்தில் பெண் தெய்வங்கள் எல்லாம் 'ஓ' வென்றலறின; கட்டடம் முழுவதும் கலங்கி நடுங்கியது. சுவரோவியங்கள் யாவும் கண்ணீர் உகுத்தன! இயற்கையாவும் எழிலழிந்தது. இத்தனேயும் ஒரு க்ஷண நேரம்தான். வீசிய புயல் அமைதியை அடையத்தானே வேண்டும்! ஆனுல் அமைதியுண்டாவதற்குள் பல கொடுமைகள் ஏற்படுவதும் இயற்கைதானே!

மன்னர் அருணுவின் கையைப்பற்ற விரைந்து நெருங்கும்போது, அவருடைய கரங்கள் ஒரு வாளினுல் வெட்டப்பட்டன. துடிதுடித்து வீழ்ந்தவர், யார், என் மகனு? அசுவபாலனு?'' என்ருர்.

"ஆ! என் தந்தையா?'' என்ருன் அவன். அருணு ஸ்தம்பித்து நின்ருள். மஹாராஜாவின் சுவாசம் நின்றது.

அசுவபாலன் அங்கு வருவான் என்பதை கனவிலும் கருதவில்லே மன்னர். அதேபோல, மன்னர் அங்கே வருவார் என்ற நினேவே அசுவபாலனுக்குக் கிடையாது.

அசுவபாலன், பின் எப்படி அங்கு வந்தான்? ஏன் வந்தான்? ராணுவ முன்னேற்றத்தையும், அதன் பெருக்கத்தையும் நாடிச் சென்ற அசுவபாலனே அங்கு வரச்செய்தவள் ஒரு பெண்தான். அவள் சித்ரமாதாவாகத்தான் இருக்க வேண்டுமென்று கருதுவதும் உண்மையே!

மன்னர் அங்கே நுழைந்து, அருணுவிடம் செல்லும்போது அவருடைய முகத்தில் தாண்டவமாடும் காமப்பேயின் கோர நிலேயைக் கண்டாள் அவள். மேலும் அவர் மாறுவேடம் புனேந்துகொண்டு வந்திருப்பதைப் பார்க்கவே அவளுக்குத் தூக்கி வாரிப்போட்டது. உடனே அவள் எண்ணம் மிகவும் வண்மை பெற்றது. ஓர் ஆவேச உணர்ச்சி வந்தவளாய் ஓடினுள் அசுவபாலனே நோக்கி. "ஓர் அதிகாரியின் கொடுமை அளவிலடங்காமலிருக்கிறது. அருணுவைப் பலாத்கார முறையில் பறிக்கப் பார்க்கிருன் அவன்! இப்பொழுதே அங்கு வந்தால் அந்தக் கொடுமைக்காரனேக் கையும் களவுமாய்ப் பிடிக்கலாம்'' என்ருள்

உடனே அவன் அங்கு ஓடிவரலானுன். அங்கு வந்தவன் அந்த அதிகாரியே தன் காதலியை வஞ்சிக்கிருன் என்று நினேத்து, அவள் கரத்தை அவன் பற்ற நெருங்கும் தருணத்தில் கைகளேத் துண்டாக வெட்டினுன். அப்பொழுது அவ்வாள் குடலிலும் தாக்கவே மஹாராஜா கீழே சாய்ந்து வீழ்ந்தார்.

"தன் மகனே தனக்கு யமனுய் முளேத்தானே!'' என்று நினேத்தார் அந்த ஒரு நொடிப் பொழுதில்! அதேசமயத்தில் "தனக்குத் தக்க தண்டனே கிடைத்தது'' என்று எண்ணியவர் மேலே ஒன்றும் நினேக்கமுடியாமல் இறந்து போனுர். அசுவபாலனுக்கு உண்டான துயரம் அளவிலடங்காது பெருகியது. அவன் 'ஓ' வென்று அலறிவிட்டான். பின்பு, சேடியின் மீது கோபம் மூண்டது.

"அந்தச் சேடி 'ஓர் அதிகாரி' என்ருளே! சர்வாதிகாரியான என் தந்தையல்லவா அவர்? அவள் சரியாக அறியாமல் சொல்லியிருப்பாளா?'' என்று கலங்கினுன். அதற்குப் பின் அவர் செய்த வஞ்சகத்தையும் அவன் நினேக்காமலிருக்க முடியவில்லே.

"தந்தையே! நீர் இப்படியும் சூழ்ச்சி செய்ய வேண்டுமா? நான் காதலிக்கும் கன்னியை நீரும் காதலித்தீர் ஒருகாலத்தில். அதற்குப் பின்பு, உமது பிள்ளேக்காக நீர் அவளே மறந்து தியாகம் செய்துவிட்டீர் என்று நம்பினேனே! என் நம்பிக்கையும் சிதைந்து உமது ஆயுளும் முடிந்ததே! மகன் கையால் வெட்டப்பட்டு தந்தை மடிந்தார் என்று உலகம் கூறுமே! அதை நான் எப்படிக் காதுகொண்டு கேட்பேன்! நண்பா! பாலசூரியா! இப்பொழுது நீ என் அருகில் இல்லேயே! மகத நாட்டுக்குப் பக்கத்தில் ஓர் ஆசிரமத்தில் இருக்கும் உனக்கு என் அலறல் கேட்குமா? அருணு! நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்! தந்தையைக்கொன்று உன்னே அடையவே என்விதிபோலும்'' என்று பல்வாருகக் கதறிய அவனே அருணு பார்த்தாள்!

"சமயத்தில் வந்து காத்துத் தன் கடமையை நிறைவேற்றினுன்! தந்தையையே கொன்ருன்! ஆஹா! அவன் அல்லவா உத்தம புருஷன்'' இவ்வாறு எண்ணியது அருணுவின் மனம். ஆனுல் அப்போதும் அவன் மீது பிரேமை உண்டாகவில்லே. நன்றி செலுத்தும் பண்பே அவளுக்கு உண்டாயிற்று! அசுவபாலன் எப்படி அங்கு வந்தான் என்பதும் அவளுக்குப் புரியவில்லே. அது அவளுக்கு ஒரு பெரிய புதிராக விருந்தது. பாலசூரியன் மகத நாட்டுக்கு அருகில் ஆசிரமத்தில் இருப்பதை அவனது கதறலிலிருந்து புரிந்துகொண்டாள்! நான் பாலனின் மேல் எவ்வளவு பிரேமை செலுத்துகிறேனே, அவ்வளவுக்கு இவனும் அவர்மீதுநட்புக்கொண்டிருக்கிருன்! ஆமாம்! சித்ரா எங்கே! அவள் இப்பொழுது இருந்தால் பாலசூரியனேக்காண்பதற்கு மார்க்கம் தேடலாமே!'' என்று நினேத்தாள்.

"ஸதிரீ தன் காதலன் செய்யும் பல தீமைகளேயும் பொருட்படுத்தமாடடாள்; அவன் பின்னேயே தொடர்ந்து செல்வாள். ஆனுல்

காதலுக்கு உரிமையற்ற ஒருவன் என்னதான் தனக்காகப் பேருதவி செய்தாலும், அவன்மீது அக்காதலைச் செலுத்தக்கருதமாட்டாள்!'' என்ற உண்மை அருணுவிடம் வெளிப்பட்டது. மேலும் "காதலென்பது கருத்தினுல் அடைவதுமில்லை; கருத்துக்குள் அடங்கியதுமில்லை; எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட ஒரு தெய்வீக சக்தி என்பதையும் அவள் செயலிலிருந்து அறிய முடிந்தது.

இந்த உண்மையை அசுவபாலன் ஏன் சிந்திக்கப் போகிருன்? தந்தையின் பிரிவால் தகிக்கும் சோகத் தீயை, அருணுவின் காதற் பொய்கையில் நனைத்துத்தானே ஆற வேண்டும்! அவனுடைய மனத்தின் நினைவும்கூட அதுவேதான்.

பொழுது விடிந்து, ஊராருக்கும் செய்தி பரவியது. நாட்டுப் பிரதானிகள் ஓடோடியும் வந்தனர்; மன்னரின் கரங்கள் வெட்டுண்டு கிடப்பதற்குக் காரணத்தைக் கேட்டார்கள். அசுவபாலன் மௌனமாய் நின்ருன்.

அவனே கொன்ருன் என்பதைச் சில சேடியர்களும், அருணுவும் அறிவார்களேயல்லாமல் மற்றவர்களுக்கு எப்படித் தெரியமுடியும்? அந்தச் சேடிகள், அசுவபாலனைக் காட்டிக்கொடுக்க விரும்புவார்களா! என்ன இருந்தாலும் அரசகுமாரன்! மகிபாலர் தாம் செய்த தவறுக்குப் பலனை அடைந்தார்! குமாரனுவது நீடித்து வாழட்டும்! அதுதான் அவர்களுடைய இதயத்தின் குறிக்கோள்!

மகிபாலரின் சவம் சமாதியில் அடக்கம் செய்யப்பட்டது. அங்கம் கண்ணீர் சிந்தியது! அது கடமையை உத்தேசித்துச் சிந்தப்பட்டதேயல்லாமல், உண்மையான பற்றுக் காரணமாக அல்ல. குமாரன் மணிமுடி புனைந்து வாழ்வதில் அங்கத்துக்குப் பூரண திருப்தி. அதற்குக் காலம் வாய்த்தது. இன்னும் முகூர்த்தம் வரவில்லை.

[ தொடரும் ]



யுத்தத்திற்குப் பிறகு முதன் முதலாக ஜப்பானில் செய்யப்பட்ட மோட்டார்கள் அக்டோபர் 29-ந் தேதி டோகியோவில் பொதுக் காட்சிக்கு நிறுத்தப்பட்டன.




## துஷ்ட-இஷ்ட-கஷ்ட குமாரர்



ஒரு செழிப்பான பள்ளத்தாக்கு; மேடும் பள்ளமுமாய், நாலு புறமும் செங்குத்தான பாறைக் குன்றுகளாய் இருந்தது. பனி மூடிய மலைப் பக்கங்களிலிருந்து பலமுகமாக அருவிகள் பொழிந்தவண்ணமாய் இருந்தன. அவற்றுள் ஒரு மலையருவி மேற்குப்புறமாய் ஒரு பெரும் பாறைக்குன்று வழியாக வெகு உயரத்திலிருந்து விழுந்து பள்ளத்தாக்கை வளமுறச் செய்தது. மாலை வேளையில் அந்தப் பொன்-மஞ்சள் வெயிலில், மலைத்தெய்வமே கீழேயுள்ள பூமியை வாழ்விக்க, ஏதோ ஒரு தங்க அருவி பொழிவதுபோல் தோன்றும். அந்த அருவியை மக்கள் பொன்னருவி என்று அழைத்து வந்தனர்.

### துஷ்ட குபேரர்

மற்ற அருவிகள் பள்ளத்தாக்கிற்கு வெளியே ஆறுகளாகப் பாய்ந்து ஜனநெருக்கமான நாடு நகரங்களின் வழியாகச் சென்றன. அந்தப் பிரதேசங்களில் பஞ்சம் வருவதும் உண்டு; கோடையின் கொடுமையும் உண்டு. அக்காலங்களிலும், இப்பள்ளத்தாக்கில் நீர் வளத்திற்குக்குறைவில்லை. ஆகவே எப்போதும் பயிர்வளம் உண்டு. பச்சை போர்த்த பள்ளத்தாக்கு, இடையிடையே பஞ்சம் பிடித்து வருந்திய நாடுகளுக்கெல்லாம் ஒரு சொர்க்கமாகத் தோன்றும். இந்தப் பள்ளத்தாக்கைக் குபேர பூமி என்று மற்ற நாட்டார் அழைத்து வந்தனர்.

அந்தப் பிரதேசம் முழுமையும் மூன்று சகோதரர்களுக்குச் சொந்தமாக இருந்தது. மூத்த இரண்டு சகோதரர்களும் துஷ்டர்கள். பரமலோபிகள். அவர்கள் முறையே 'துஷ்ட குமாரன் 1, துஷ்ட குமாரன் 2' என்று ஜனங்களால் அழைக்கப்பட்டனர். கடைக்குட்டியான நல்லவனை 'இஷ்ட குமாரன்' என்று அழைத்தார்கள்.

துஷ்ட குமாரர்களுக்கு ஏழைகளிடம் இரக்கம் கிடையாது. தங்கள் வேலைக்காரர்களையும் கொடுமையாகவே நடத்தினார்கள்; அரைப்பட்டினி போட்டு வேலை வாங்கினார்கள். அவர்களை அடிமைகளாக நடத்திச் சவுக்கடி கொடுத்தார்கள். சகோதரர்கள் சீக்கிரம் பெரும் பணக்காரர்களாகிவிட்டார்கள். 'குபேர சகோதரர்கள்' என்று அவ்விருவரையும் குறிப்பிடுவதுமுண்டு. அவர்களுடைய மாளிகையில் பொன்னும் மணியும் நவதானியங்களும் குட்டிக் குன்றுகள்போல் குவிந்து கிடக்கும்.

கடைக்குட்டியான இஷ்ட குமாரனே வேலைக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் இஷ்டனாகவே நடந்து கொண்டான்; அவர்களை ஒரு போதும் கஷ்டப்படுத்தமாட்டான். அந்தத் தம்பியையும் அடிமை போலவே நடத்தினார்கள் மூத்த சகோதரர்கள்.

ஒரு சமயம் சுற்றுப்புற நாடுகளில் பஞ்சம் வந்துவிட்டது, ஏழைகள் கும்பல் கும்பலாகக் குபேர பூமிக்கு வந்து கொள்ளை விலை கொடுத்து உணவுப் பொருள்கள் பெற்றுச் செல்ல வேண்டியதாயிற்று. அதிகப் பணம் கொடுக்க முடியாதவர்கள் பட்டினி கிடந்து பிராணனை விட்டார்கள். அக்காலத்தில் குபேர சகோதரர்களின் குபேர சம்பத்து, கொள்ளை லாபம் அடித்து முன்னிலும் பன்மடங்கு அதிகமாய்ப் பெருகிவிட்டது. குட்டிக் குன்றுகளாயிருந்த பொருள்கள் பெருங்குன்றுகளாய் வளர்ந்துவிட்டன.

### பசித் தீக்கு விறகு

இப்படியிருக்க ஓர் ஆண்டில் குபேர பூமியில் பனிக்காலம் வழக்கத்தைவிடக் கடுமையாக இருந்தது. ரோமக் கம்பளிகளால் தங்களைப் போர்த்துக்கொண்டு குபேர சகோதரர்கள் வெளியே பண வசூலுக்குப் போயிருந்தார்கள். தம்பியிடம், "ஒருவரையும் உள்ளே விடக்கூடாது" என்றும், ஒருவருக்கும் ஒன்றும் கொடுக்கக் கூடாதென்றும் எச்சரிக்கை செய்திருந்தார்கள். வெளியே பனி, மழைபோல் பொழிந்தது. சமையலறையில் நெருப்புக்கு அருகே இஷ்ட குமாரன் உட்கார்ந்திருந்தான்.

வெளிக் கதவைத்தட்டிய சத்தம் கேட்டது. ஏதோ காற்றாகத்தான் இருக்கும் என்று இஷ்டகுமாரன் முதல் முதல் எண்ணினான். பலமாகத் தட்டிய சத்தம் கேட்டது. இஷ்டகுமாரன் ஜன்னலைத்திறந்து கொண்டு வெளியே பார்த்தான். ஓர் அதிசயக் குள்ளன் வெளியே காணப்பட்டான். இஷ்ட குமாரன் அந்த அன்னியனை "யார்?" என்றுகேட்க, அவன் "நான் கஷ்ட குமாரன்; பனியால் நனைந்து பசியால் உலர்ந்து வந்திருக்கிறேன். இஷ்டா! கதவைத் திற. என்றான்"

தான் அவனை உள்ளேவிட்டால் தன் அண்ணன்மார் தன்னை அடித்துக்கொன்று விடுவார்கள் என்று இஷ்டகுமாரன் தெரிவித்தான். வீட்டுக்குள்ளே நீ வந்து என்ன செய்யப்போகிறாய்?" என்றும் குள்ளனை ஒரு கேள்வி கேட்

டான். அதற்கு அவன், "என்ன செய்யப்போகிறேனு? குளிர் காயத் தீ வேணும், விறகு வேணும்; பசித் தீக்கும் விறகு வேணும்! இப்போது என் இரு பெருந் தேவைகள் இவை" என்று பதில் சொன்னுன்.

குள்ளன் நனைந்திருப்பதைப் பார்த்தும், 'பசி' என்று அவன் சொன்னதைக் கேட்டும், இரங்கிய இஷ்ட குமாரன் கதவைத் திறந்து அவனை உள்ளே வரவிட்டான். "என் சகோதரர்கள் வருவதற்கு முன்பே, கஷ் குமாரா! நீ போய் விட வேணும். அரை நாழிகைக்குள் போய்விட வேண்டும்" என்ருன்.

"அவர்கள் வரட்டும்; வந்துதான் என்னைப் பார்க்கட்டுமே; நான் அவர்களோடு பேச விரும்புகிறேன்."

"அவர்கள் வந்து விட்டால், உன்னையும் கொன்று என்னையும் கொன்று விடுவார்களே!"

"அப்படியா செய்தி? அவர்கள் கொல்வதற்கு முன் பசி என்னைக் கொன்று விடும்போல் இருக்கிறது! ஏதாவது சாப்பாடு போடு."

"என் சாப்பாட்டை உனக்குப் போட்டு விடுகிறேன். விரைவில் சாப்பிட்டு விட்டு ஓடிப் போய் விடு."

## யார் கள்ளன்?

குள்ளனே அவசரப்படாமல் கொஞ்சம் கொஞ்சமாய் மென்று கொண்டிருந்தான் இஷ்ட குமாரன் ஆத்திரப்படுத்தியும் பலன் இல்லை. குள்ளன் அஞ்சவில்லை. திடீரென்று கதவைத் தட்டும் சத்தம்: இஷ்டகுமாரன் நடுங்கிப் போய்க் கதவைத் திறந்தான். துஷ்ட குமாரர் இருவரும் உள்ளே வந்ததும் குள்ளனைக் கண்டு, "யார் இந்தக் கள்ளன்? எப்படி வந்தான்?" என்று கேட்டார்கள்.

"நனைந்திருந்தான்; கஷ்டகுமாரன் பசியால் கஷ்டப்பட்டான்" என்ருன் இஷ்டகுமாரன். துஷ்டகுமாரன்-1 ஒரு தடியைத் தூக்கிச் சுழற்றி, இஷ்டகுமாரனை அடிக்க வந்தான். இஷ்டகுமாரன் நடு நடுங்கினுன். ஆனல் அடி விழுவதற்குள் குள்ளன் குறுக்கே வந்து விட்டான். "இதோ உனக்கும் கபால மோக்ஷம் தருகிறேன்!" என்று ஓங்கியடித்தான் குள்ளன் தலையில், துஷ்டகுமாரன்-1 இஷ்டகுமாரன் பயத்தால் மூர்ச்சித்துப் போனுன்.

அவன் விழித்துக்கொண்டதும்—என்ன ஆச்சரியம்!—குள்ளன் மண்டை உடைந்து போகவில்லை. அந்த மண்டைக்கு ஒரு சேதமும் இல்லை. தடி தான் நொறுங்கிக் கிடந்தது. 'அடே கள்ளா! நீ யார்?" என்று கேட்டான் துஷ்டகுமாரன்-2.

"கள்ளனில்லை, குள்ளன், நீங்களே கள்ளர்!"

"வந்த காரியம் என்னடா, கள்ளக்குள்ளா!

"பசிக்கு உணவும் பனிக்கு நெருப்பும் தேடி வந்தேன்."

"வெளியே போய் விடு, மரியாதையாக"

"இந்தச்சாப்பாட்டை மரியாதையாகமுடித்துக்கொண்டு போகிறேன், ஐயா!"

"சாப்பாடா உனக்கு? போ வெளியே!"

"தயவு செய்யவேணும். விரைவில் சாப்பிட்டுப்போய் விடுகிறேன்."

"அதெல்லாம் முடியாது; கழுத்தைப் பிடித்து உன்னை வெளியே தள்ளுகிறேன்."

## "கள்வரே! கோபிக்க வேண்டாம், போய் வருகிறேன்"

துஷ்டகுமாரன் 2 குள்ளனைக் கழுத்தைப் பிடித்ததுதான் தாமதம், தானே தட்டமாலை சுற்றிக் கீழே விழுந்து விட்டான். துஷ்டத் தம்பிக்கு உதவி செய்ய வந்த துஷ்டத் தமையனும் தடுமாறிச் சுவரில் முட்டிக்கொண்டு விழுந்து விட்டான். "அவனுக்கே கபால மோட்சம் கிடைத்து விட்டதோ?" என்று அஞ்சினுன் இஷ்டகுமாரன். பிறகு குள்ளன் அவர்களை நோக்கி, 'நமஸ்காரம். போய் வருகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டான்.

"போய்த் தொலை!" என்ருன் துஷ்டகுமாரன்—1.

"இல்லை, போய் வருகிறேன்; போய் வரத்தான் போகிறேன். நட்ட நடு நிசிக்குச் சட்டமாய், வட்டமாய் வரப் போகிறேன்! உங்களைச் சந்திப்பது அதுதான் கடைசித் தடவை!"



மறுபடியும் 'அந்தப் பைத்தியம்' வரத்துணிந்தால் அவனைக் கொன்று விடுவோம் என்று துஷ்ட குமாரர்கள் அவனைப் பயமுறுத்தினர். ஆனல் அதற்கு முன்பே கதவைத் தடாலென்று அடைத்துக்கொண்டு குள்ளன் போய் விட்டான்.

குள்ளன் போனதும், பசியாயிருந்த தம்பியைப் பட்டினி போட்டு விட்டுத் துஷ்ட குமாரர் இருவரும் குடித்தார்கள்; வயிறார உண்டார்கள். பிறகு மெத்தைகளில் சுகமாய்ப் படுத்துக்கொண்டார்கள். கதவுகளும் ஜன்னல்களும் பந்தோபஸ்தாக அடைக்கப்பட்டிருந்தன.

## கடைசிச் சந்திப்பு

நட்ட நடு நிசியில் கதவு தட்டிய பெருஞ் சத்தம் கேட்டது. இவர்கள் போய்த் திறக்க வேண்டிய சிரமம் இல்லாமலே, கதவு திறந்து விட்டது. என், கதவு பிளந்துவிட்டது படாரென்று. மாளிகை குலுங்கிப் போயிற்று. "இடி விழுந்ததுபோல் சத்தம் கேட்டதே, அது என்ன?" என்று பயந்து கொண்டே துஷ்ட குமாரன்—1 எழுந்து படுக்கையில் உட்கார்ந்தான். "படுக்கையெல்லாம் நனைந்து விட்டதே!" என்று துஷ்டகுமாரன் 2 சொல்லிக் கொண்டே எழுந்தான். அப்போது "வேறு யாருமில்லை. நான்தான்! போய் வருகிறேன் என்றேனே, வந்து விட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே குள்ளன் உள்ளே வந்தான்.

குள்ளன் நடந்து வந்தானா? மிதந்து வந்தானா? அந்த வெள்ளத்திலே ஒருவட்டப்பெருங்குமிழி போல் உருண்டு வந்த ஆசாமி அவர்களை நோக்கி, "நீங்கள் உங்கள் தம்பியின் அறைக்குப் போய் விடுங்கள், மரியாதையாக. அங்கே இவ்வளவு மோசமாக இராது" என்றான். துஷ்ட சகோதரர்கள் இஷ்ட சகோதரனுடைய அறைக்குஓடிப்போய்விட்டார்கள். அவர்கள் பேசும்போதே குள்ளன், "கனவான்களே! ஞாபகம் இருக்கட்டும், நமது கடைசிச் சந்திப்பு" என்றான். நீர்க் குமிழி குள்ளனுடன் மறைந்துவிட்டது.

பொழுது விடிந்ததும் துஷ்டகுமாரர்கள் திகலடைந்தார்கள். குபேர பூமியெங்கும் ஒரே வெள்ளச் சேதம். பயிர் பச்சைகள், ஆடு மாடுகள் எல்லாம் போய்விட்டன. பொன்னும் மணியும் நெல்லும் புல்லும் எல்லாம் வெள்ளத்திலே போய்விட்டன. மூன்று சகோதரர்களும் பிழைப்பதற்கு வேறு இடம் தேடிப்போக வேண்டியதாயிற்று. கடைசித் தம்பி இருந்த அறையில் வெள்ளம் போய்ப் பாழாக்காததால், அங்கேயிருந்த சில சாமான்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

## முதலாளிகள் தொழிலாளிகளாகித் திருடரானது

ஒரு நகரத்திலே மூன்று சகோதரரும் பொற்கொல்லராக அமர்ந்து வேலை செய்தார்கள். வறுமையின் கொடுமையே வாத்தியாயராகிச் சவுக்கடி கொடுத்து அவர்களுக்கு அந்தத் தொழிலைக் கற்பித்தது. துஷ்டகுமாரர் இருவரும் தங்கத்திலே தாமிரம் கலந்து வந்ததால், அந்த வியாபாரமும் நாளடைவில் பாழாய்ப் போயிற்று. துஷ்ட குமாரர்கள் கிடைத்த பணத்தையும் குடித்துத் தொலைத்தார்கள். துஷ்ட குமாரர் இருவருக்கும் குடிப் பழக்கம் அதிகரித்ததால் குடித்தனம் பாழாகிவிட்டது. இஷ்ட குமாரன் மட்டும் இந்த வறுமையிலும் செம்மையாகவே நடந்துகொண்டான்; எனினும் அண்ணன்மாருக்காகத் தம்பியும் கஷ்டப்பட வேண்டியதாயிற்று.

துஷ்ட குமாரர் இருவரும், வேறு தொழில் இல்லாததால் திருட்டுத் தொழிலிலும் இறங்கிவிட்டார்கள். ஒரு பெருங் கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்டார்கள். போலீஸ்காரர் கண்டுபிடித்து விட்டதால் அவர்கள் தண்டிக்கப்பட்டுச் சிறைவாசம் செய்யலானார்கள்.

## மீண்டும் குள்ளன

இஷ்ட குமாரன் தன் சகோதரர்களுக்கு நேர்ந்த கதியை நினைத்துப் பெரிதும் வருந்தினான். வேறொரு பொற்கொல்லனிடம் வேலைக்கு அமர்ந்து செட்டாக வாழ்ந்து கொஞ்சம் பணமும் மிச்சம் பிடித்தான். ஒரு நாள் பெரும் பசியோடு சாப்பிட உட்கார்ந்தான். உட்கார்ந்ததும், ஒரு பசியனைக் கண்டு அவனுக்குத் தன் உணவை அளித்துவிட்டுத்தான் பட்டினி கிடந்தான்.

அந்தப் பசியன், தன் பெயர் 'இஷ்ட குமாரன்' என்று சொல்லிப் பழைய குள்ளனாக மாறிக் காட்சியளித்ததும் ஆச்சரியத்தால் இஷ்ட குமாரன், திடுக்கிட்டான். எனினும் இஷ்ட குமாரனுக்குத் தானே சாப்பிட்டதுபோல் பசி தீர்ந்து திருப்தி உண்டாகிவிட்டது.

## மீண்டும் குபேர பூமி

குள்ளன் அவனை நோக்கி, "இந்தக் கமண்டலத்தைப் பெற்றுக்கொள். இதிலுள்ள தீர்த்தத்தை நீ அந்தப் பாழடைந்த குபேர பூமியில் சிறிது தெளிக்க வேண்டும். பாக்கியை அந்த அருவியில் கொட்டி விடு' என்றான்.

இஷ்டகுமாரன் கமண்டலத்தைப் பெற்றுக்கொண்டதும், குள்ளன் மறைந்துவிட்டான். பிறகு இஷ்டகுமாரன் குபேரபூமிக்குப் போய்க் குள்ளன் சொன்னபடியே செய்தான். கொடுமையால் அழிந்துபோன செல்வம், இஷ்டகுமாரனுடைய அன்பினாலும் இரக்கத்தினாலும் மீண்டும் வளர்ந்தோங்கியது. பொன்னருவி அந்தப்பிரதேசத்தைச் செழிக்கச் செய்து, இஷ்டகுமாரனுக்குப் பொன்னையும் புகழையும் விளைவித்ததால், உண்மையாகவே பொன்னருவியாகி விட்டது.

## எழுதும் அன்பர்களுக்கு



"மித்திரன்" வாரப் பதிப்புக்கு விஷயதானம் செய்பவர்கள் காகிதத்தின் ஒரே பக்கத்தில், தெளிவாக "வாரப் பதிப்பு" என்று எழுதியனுப்ப வேண்டும். ஏற்றுக்கொள்ளப் படாத கட்டுரைகளைத் திரும்பப்பெற விரும்புபவர்கள் விலாசமிட்ட தபால் கவர்களையோ, தபால் தலைகளையோ சேர்த்தனுப்பவேண்டும்.

—ஆசிரியர்.




> "கதை பிரசுரத்திற்கு அங்கீகரிக்கப்படாவிடில், திருப்பி அனுப்பும்பொருட்டு, கைப்பிரதியுடன் போதிய 'ஸ்டாம்பு'கள் இணைத்துள்ளேன்"
> —இளம் எழுத்தாளர்.

தூக்கி வாரி விடப்பட்ட கிராப்பு, தீர்க்கமான நாசியில் கம்பீரமாகக் காட்சியளிக்கும் மூக்குக்கண்ணாடி, வெள்ளை வெளேர் என்று கதர் ஜிப்பா, கையில் கத்தை பேப்பர்கள்—இத்யாதி அலங்காரங்களுடன் எங்கேயாவது ஒரு ஆசாமியை சந்தித்தால் அது எங்கள் அண்ணா ராமுவாகத்தானிருக்க வேண்டும். செலாவணி அதிகமில்லாத இரண்டு பத்திரிகைகளில் எழுதிவிட்டு 'எழுத்தாளன்' என்ற பட்டத்தை தனக்குத்தானே சூட்டிக்கொண்டவன், அவன்!

பள்ளிக்கூடத்தில் படிக்கும்போதே கதை எழுதுவதில் கவனம் செலுத்திய அவன், அதிசயிக்கத்தக்க விதமாக இன்டர்மீடியட் பாஸ் செய்தது எங்களுக்கு ஏகப்பட்ட ஆச்சரியத்தை விளைவித்தது. பாழாய்ப்போன படிப்பிற்கு அத்தோடு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, உத்யோக வேட்டையில் பரிபூர்ணமாக இறங்கிவிட்டான். தொடர்ந்து படிக்கும்படி எவ்வளவோ தடவைகள் அப்பா கூறியும், விடாப்பிடிவாதமாக 'அதற்கும் நமக்கும் வெகு தூரம்!' என்று அலக்ஷியமாக உதறி எறிந்து விட்டு, இறுதியில் ஒரு குமாஸ்தாவாக உருவெடுத்துவிட்டான்!

"சின்னஞ் சிறு வயதிலிருந்தே கதைகள் எழுத ஆரம்பித்து விட்டேன்" என்று சொல்லிக்கொள்வதில் ராமுவிற்கு அலாதி பெருமை. அளவற்ற சந்தோஷமுங்கூட! "ஹைஸ்கூலில் படிக்கும்போதே மாணாக்கர்கள் படிப்பதற்காக 'இன்டென்' என்ற கைப் பத்திரிகை நடத்தினேன். அதற்காக எனது ஹெட்மாஸ்டர் எவ்வளவு பாராட்டினார், தெரியுமா? அதில் கதைகள் என்ன. காரசாரமான அரசியல் கட்டுரை என்ன. சினிமா விமர்சனமென்ன......" என்று அளந்துகொண்டே போவான் தன்னுடைய பால காண்டத்தை.

சளைக்காமல் அரட்டை அடிப்பது, எந்தக் கதையையும், அப்பட்டமாக விமர்சனம் செய்வது இவைகளெல்லாம் ராமுவிற்கு மிகவும் பிடித்தமான விஷயங்கள். எவ்வளவு பிரபல எழுத்தாளர் கதையாக இருந்தாலும், நாலு பேருக்கு எதிரில் ராமுவின் விபரீஸனத் தராசில் எடைபோடப்பட்டுத்தான் ஆகவேண்டும். பத்திரிகை உலகில் தனக்குத் தெரியாத ஆசாமிகளே கிடையாது என்று தம்பட்டம் அடித்துக்கொள்வான். எந்தப் புனைப்பெயர் ஆசாமிகளின் உண்மைப் பெயரைத்தான் கேளுங்களேன்; 'டக்'கென்று கூறிவிடுவான்.

"ஏண்டா வி.ரா என்று ஒருவர் அடிக்கடி எழுதுகிறாரே, அவர் முழுப்பெயர் என்ன?"

## எழுத்தாளன் ராமு



'அவரா? வி.ராமஸ்வாமி!" என்று சிறிதும் தயங்காமல் ஒரு போடு போடுவான். உண்மையிலேயே அவரது பெயர் 'விஜயராகவனாக இருக்கும்! ஆனால்

இந்தமாதிரி இக்கட்டான சமயங்களிலெல்லாம் அவனுக்கு மிகவும் உதவி செய்வது அவனது அடித்துப் பேசும் திறனே!

ஆர்ப்பாட்டமாக உதித்து, அதே வேகத்திலேயே அடங்கி ஒடுங்கி விடும் மாதாந்திரப் புத்தகங்கள் முதல் உலகத்திலுள்ள எல்லாத் தமிழ்ப் பத்திரிகைகளையும் வாங்குவது, விழுந்து விழுந்து அவைகளைப் படித்து, கட்டுரைகளை அலசி ஆராய்ந்து, தனது சிருஷ்டிகளின் உயர்வைப்பற்றிக் கேட்போர் காது புளிக்கும்வரை பறையடிப்பது—இதெல்லாம் ராமுவின் தினசரி நடவடிக்கைகள்! வருங்கால எழுத்தாளர் உலகில் சிறந்த நக்ஷத்திரமாகப் பிரகாசிக்க வேண்டும், எல்லாப் பத்திரிகைகளும் விசேஷ மலர்கள் வெளியிடுமுன் தனக்கு விஷயதானம்கோரி எழுத வேண்டும்—என்பதெல்லாம் அவனது நெடுநாளைய கனவுகள்!

இதுமட்டுமா? தனக்கு வாய்க்கும் மனைவி ஒரு ஸ்திரீ எழுத்தாளியாக இருக்கவேண்டும்; தனது கதைகளை ரசிக்கவும், தனது கலைத் தொண்டில் சிறந்த பங்கு எடுத்துக்கொள்ளவும் அவளுக்குத் திறன் இருக்க வேண்டும் என்று பல கோட்டைகள் கட்டினான்!

"ஏண்டா, ராமு! இன்னிக்கு ஒரு ஜாதகம் வந்திருக்கு; நல்ல பணக்கார இடம். பெண் படிச்சிருக்கு. ரொம்ப நன்னாப்பாடறது..." என்று ஆரம்பிப்பாள் அம்மா.

அதெல்லாம் இருக்கட்டும். அவள் எந்தப்பத்திரிகையிலாவது கதைகள் எழுதியிருக்கிறாளாமா?"—

இது அண்ணாவின் குறுக்குக் கேள்வி!

பொங்கிவரும் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு அம்மா "ஏண்டா, படிச்ச பெண்ணாக இருந்தால்போதாதா? கதைகள் வேறு எழுதி சந்திரிக்கணுமா?" என்று கேட்டு வைப்பாள்.

"இதோ பார், அம்மா! கல்யாணம் செய்து கொள்கிறது நான், எனக்கு வாய்க்கும் மனைவி என் மனதிற்குப் பிடித்திருக்கவேண்டும். நான் பிரபல எழுத்தாளனாகப் பிரகாசிக்க வேண்டுமானால் என் மனைவி ஒரு ஸ்திரீ எழுத்தாளியாக இருக்கவேண்டும். என் கதைகளுக்கு மணியான எழுத்தில் அருமையான 'காப்பி' எடுத்துத் தரவேண்டும். என் கட்டுரைகளை நன்றாக ரசித்து அபிப்பிராயங்கள் தெரிவிக்கவேண்டும். அவசியமானால் சில சமயங்களில் 'பிளாட்டுகள்' கற்பனை செய்து தரவேண்டும்..." என்று முகத்திலே அசடு வழிய 'கண்டிஷன்'கள் போட்டுக்கொண்டே போவான்!

"ஐயோ, அசடே!" என்று நொந்து கொள்வாள், அம்மா, இவ்வாறெல்லாம் நிபந்தனைகள் போட்டுக்கொண்டு, இப்படிப்பட்ட பெண்தான் வேண்டும் என்று கூறுகிற 'ஆத்மா'வைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொள்ள? கடைசியில் (துர்) அதிர்ஷ்டவசமாக அண்ணாவிற்கு அப்படிப்பட்ட மனைவி விரைவிலேயே வாய்த்தாள். ராமு மாதிரி அவளும் நாலு பத்திரிகைகளுக்குப் புனைப்பெயரில் கதைகள் எழுதியிருக்கிறாளாம்!

மன்னி வந்ததிலிருந்து வீட்டில் ஒரே அமர்க்களம்தான்! அமளிதுமளிதான்!! எங்களது பவுண்டன் பேனாக்கள் திடீரென்று 'ஸ்டிரைக்' பண்ண ஆரம்பித்ததிற்கும், குவிந்திருந்த பேபர்கள் குபீரென்று குறையத் தொடங்கியதற்கும் பிறகு தான் காரணம் தெரிய வந்தது. 'கதை எழுதுகிறேன்' என்று இருக்கிற 'ஸ்டேஷனரி'களையெல்லாம் தாராளமாக உபயோகிக்கலானாள் மன்னி. அம்மாபாடு பரம திண்டாட்டத்தில் வந்து முடிந்துவிட்டது. சதா சர்வகாலமும் அண்ணா அறையில்தான் வாசம். என்ன கதையோ! என்ன இலக்கிய சேவையோ!!

வந்து ஒரு வாரத்திற்குள்ளாகவே அண்ணாவிற்கும் மன்னிக்கும் தகராறு வானளாவ வளர்ந்துவிட்டது. மன்னி இனிமேல் 'சரோஜா ராமச்சந்திரன்' என்ற பெயரில் தான் விஷயதானங்கள் செய்ய வேண்டுமென வற்புறுத்தினான், அண்ணா. ஆனால் மன்னியோ பழைய புகழுக்கு பங்கம் வந்துவிடப் போகிறதேயென்று, அதே புனைப் பெயரில்தான் தொடர்ந்து எழுத முடியுமென பிடிவாதம் செய்தாள். கடைசியில் இந்தப் பெயர்த் தகராறு மூன்று நாட்கள் மௌனத்தில் போய் முடிவடைந்தது. ஆனால் இறுதி வெற்றி மன்னிக்கே என்று கூறவும் வேண்டுமோ?




"ஏய், சரோஜா! காலம்பறயே இந்தக் கதையைக் 'காப்பி' பண்ணி வையுன்னு சொல்லிவிட்டுப் போனேனே! இத்தனை நாழி என்ன பண்ணினே?" என்று அண்ணா வீடே அதிரும்படி இரைந்துகொண்டிருந்தான்.

உங்கள் கதையைக் 'காப்பி' பண்ணி வைக்கத்தான் இங்கே நேரமிருந்ததோ? 'கலைவாணி' பத்திரிகை ஆசிரியர் அதன் தீபாவளி மலருக்குக் கதையனுப்புமாறு கேட்டு எழுதியிருக்கிறார். அதற்காக அவசர அவசரமாக ஒன்று தயாரித்துக்கொண்டிருக்கிறேன்." என்று கணீரென பதிலளித்த மன்னியின் குரலிலே பெருமிதத்தின் பிரதிபலிப்பு!

தூக்கிவாரிப்போட்டது, அண்ணாவிற்கு! எத்தனையோ தடவை முயற்சித்தும் ஒரு சாதாரண இதழில்கூட தனது கதையைப் பிரசுரிக்காத கலைவாணிப் பத்திரிகையின் விசேஷ மலருக்கு தனது மனைவியின் கதை வேண்டுமாம்! நினைக்க நினைக்க ஆத்திரத்தால் அவன் நெஞ்சம் வெடித்துவிடும் போலாகிவிட்டது.

கல்யாணமான புதிதில் ராமுவிற்கு இருந்த உற்சாகமெல்லாம் இப்போது உருத்தெரியாமல் கரைந்துவிட்டன. அடிக்கடி மன்னிக்கும், அவனுக்கும் விவாதங்கள் பலமாக நடைபெற்றன. பத்திரிகையுலகில் மன்னியின் பெயர் நாளுக்கு நாள் அடிபட்டது. அனேகமாக எல்லாப் பத்திரிகைகளிலுமே மன்னியின் கதைகள் வெளிவந்தன. பாவம், அண்ணா...?

சில சமயங்களில் அண்ணாவும், மன்னியும் கதை எழுதுவதற்கு விஷயம் இல்லாமல் திண்டாடிக் கொண்டிருப்பார்கள். எதேச்சையாக அம்மா "இந்தாடா ராமு! ரொம்ப நாளைக்கு முந்தி எங்கள் கிராமத்தில் நடந்தது" என்று ஏதாவது சுவாரஸ்யமான சம்பவத்தை விவரிப்பாள்.

"இது எனக்குத்தான்!" என்று அண்ணா முந்திக்கொள்வான்.

"அதெல்லாம் இல்லை; இதை வைத்துக்கொண்டு நான்தான் கதையெழுதுவேன்" என்று விட்டுக்கொடுக்காமல் பேசுவாள், மன்னி!

"எனக்குத்தான் கைவசம் 'பிளாட்டே' இல்லை. நான் தான் எழுதுவேன்!"

'மந்தமாருதம் பத்திரிகைக்கு என்னைக் கதை கேட்டிருக்கிறார்கள். அதற்கு இதுதான் சரியான கதை!"

"என்னது? மந்தமாருதம் பத்திரிகைக்கு உன்னைக் கதை கேட்டிருக்கிறார்களா? எனக்கு எழுதவில்லையே!"

'அதென்னமோ: பிரபல எழுத்தாளர்களாகப் பார்த்து கேட்டிருக்கிறார்கள்!" என்று சூட்டோடு சூட்டாக ஒரு 'டோஸ' விட்டாள் மன்னி. பாவம்; ராமுவின் முகம் காண சகிக்க முடியாதபடி கார் மேகம்போல இருண்டுவிட்டது. அவனுக்குத் தெரியுமா, பத்திரிகை உலகில் ஸ்திரீ எழுத்தாளர்களுக்கு உள்ள சலுகையைப்பற்றி?

இறுதியில் அண்ணாவிற்கே தனது இலக்கிய சேவையில் ஒரு சலிப்பு தட்டிவிட்டது. "ஏண்டா, ஒரு ஸ்திரீ எழுத்தாளியை மணந்து கொண்டோம்?" என்ற முடிவிற்குக்கூட வந்து விட்டான். சிறந்த எழுத்தாளனாகப் பிரகாசிக்க நினைத்த அவனது மனக்கோட்டைகள் இங்ஙனம் சிதைந்துவிட்டதைக் காண எல்லையற்ற மனச் சோர்வு! வெகுநாட்கள் 'இதற்கென்னடா செய்வது?' என்று குழம்பி கடைசியில் முடிவாக ஒரு தீர்மானத்திற்கு வந்தான்.

இப்பொழுதெல்லாம் அண்ணா பத்திரிகைகளுக்குக் கதை எழுதுவதை நிறுத்திவிட்டான் என்றால் என்னவோ ஏதோ என்று ஆச்சரியப்பட்டுவிடாதீர்கள்! அவனுடைய கற்பனைகளும் மன்னியின் பெயரிலேயே செல்கின்றன. யார் புகழடைந்தால் என்னய்யா? தான் ஒரு எழுத்தாளன் என்று சொல்லிக் கொள்வதைவிட, தனது மனைவி ஒரு பிரபல ஸ்திரீ எழுத்தாளி என்று தம்பட்டம் அடித்துக் கொள்வதில் அண்ணாவிற்கு ரொம்ப ரொம்பப் பெருமை! என்ன செய்வது? இப்படியும் ஒரு ஆத்மா!!

—o—






குடந்தை ஸ்ரீ ஜய மாருதி வாசகசாலையின் ஆதரவில் நகர சபைத் தலைவர் ஸ்ரீமான் எம். சி. எஸ். ரத்தின சபாபதி செட்டியார், உப தலைவர் ஸ்ரீமான் டி. சம்பத் பி. ஏ. பி. எல்., ஸ்ரீமான் அப்பாஸாமி செட்டியார் ஆகியோருக்கு டாக்டர் ... தலைமையில் உபசரிப்பு நடைபெற்றது.




# சருமநோய்கள்

*

வைத்திய ரத்ன பண்டித
எம். துரைசாமி ஐயங்கார்

கடவுள் எந்தப் பிராணியையும் ஜங்கமஸ்தாவரத்தையும் படைக்கும்போது அந்தப் பிராணி அல்லது ஸ்தாவரம் வெயில், குளிர் முதலியவற்றுலும் வேறு வெளிப்புற தாக்குதல்களாலும் கேடுராமலிருக்கக் கருதி அவற்றின் உட்புற வெளிப்புற உறுப்புகளைச் செவ்வனே காப்பதற்காக வெகு விசித்திரமான போர்வையை அமைத்திருக்கிறார். அக்கவசத்தை த்வக் அல்லது சர்மம் என்போம். இச்சர்மம் அந்தந்த பிராணியின் உடற் கூறுகளுக்கு ஏற்றவாறும், அவை வெளியே வெயில் குளிர்களில் அலையும்போது தம் உடல்களைக் காத்துக் கொள்ள வேண்டிய நிலைமைகளுக்கேற்ற விதமாகவும் பலவேறு பருமனை அமைந்திருக்கிறது. இக்கட்டுரையில் கூறப்போவது மனிதரது சர்மத்தைப்பற்றிய விஷயம். நமது உடலை முற்றிலும் போர்த்திருப்பது ஜீவ சக்தியைப் பெற்று சுறுசுறுப்பாயுள்ள சர்மம், இச்சர்மம் ஐம்பொறிகளில் ஒன்றுன பரிசேந்த்ரியமென்னும் கூர்மையான உணர்ச்சி தரும் இந்திரியத்திற்கு ஆதாரமானது.

நமது போர்வையில் அல்லது சட்டையில் அடிக்கடி அழுக்கு சேருவதும், அவற்றை அப்போதைக்கப்போது சுத்தம் செய்து உபயோகிப்பதும் ஆரோக்கியத்தைக் காப்பதற்கு இன்றியமையாத முறையல்லவா? அது போலவே உடலனைத்தையும் போர்த்துக் காக்கும் நமது இயற்கைக் கவசமான சர்மத்தை நாள்தோறும் சுத்தமாகக் குளித்து நிர்மலமாக வைத்துக்கொள்வதும், ஆரோக்கிய பரிபாலனத்திற்கு மிகவும் அவசியமான முறையாகும். நன்கு சுத்தம் செய்யாமையாலோ, சரீரத்தில் ஏற்படும் வேறு வியாதி நிலைமைகளாலோ, சர்மரோகமுள்ளவரின் சேர்க்கையினுலோ, கால நிலைமை முதலிய வேறு காரணங்களாலோ சர்மம் பல்வேறு நோய்களால் தாக்கப்படும். அவற்றுள் சில நோய்களின் தன்மைகளையும் பரிஹாரங்களையும் இக்கட்டுரையில் தெரிவிக்கலாம்:—

பாமா என்பது அடிக்கடி பலருக்குக் காணும் முக்கியமான சர்ம ரோகங்களுள் ஒன்று. இதைத் தமிழில் ஸாதாரணமாய் சிரங்கு என்பார்கள். தோலுக்கு மேல் சிறிது எழும்பி அடுத்தடுத்து கொப்புளங்களாகத் தோன்றும். மடிப்புள்ள பாகங்களில் முக்கியமாய் விரல்களுக்கிடையில் இவை ஏற்படும். சொறிய வேண்டிய உணர்ச்சியும், அரிப்பும் அதிகம் உண்டாகும். ஒரு கொப்புளம் கிளம்பினுல், அதன் அருகில் அநேகம் கிளம்பிவிடும். இவற்றில் சில தானே உடையும்; சில கொப்புளங்களைப் பிணியாளி தானே தன் விரல்களால் நசுக்கிக்கொள்ளும்படியான உணர்ச்சியேற்படும். சில வற்றிலிருந்து சொற்பம் சீழும், பல வற்றிலிருந்து ஒருவகை ஊனீரும் வடியும். உடைந்த பாகங்களில் வலிப்பும் அழற்சியும் ஏற்படும். ஸாதாரண நிலைமையில் இப் பாமா என்னும் சிரங்கு ஒரு வாரத்தில் தணிந்து குறையும்.

கச்சூ என்பது மற்றொரு வகை சர்ம ரோகம். இதில் சிறு சிறு குறுவைகள் போன்ற கொப்புளங்கள் தோன்றும். ஆனல் இவற்றில் நீர்க்கசிவு அதிகம் இருப்பதில்லை. இக்குறுவைகள் ஒன்றோடொன்று சேர்ந்தாற்போல் கிளம்பி படைகள்போல் காலக்கிரமத்தில் படர்ந்து விருத்தியாகும். தாங்கமுடியாத அரிப்பு ஏற்பட்டு பிணியாளி வெகு இதமாயிருப்பதுபோல் எண்ணி மேன்மேலும் இவையுண்டான இடங்களைச் சொறிவது வழக்கம். அப்பொழுது அழற்சியேற்படுவதைக் கூட அவன் அலக்ஷியம் செய்து, தன்னையுமறியாது சொறிந்துகொள்வான். சிலருக்கு இச்சொறியுடன் கூடிய அரிப்புப் புண்கள் விரல்களின் இடுக்குகளிலும், கணுக்கையின் முன்புறத்திலும், முழங்கையிலுங்கூட உண்டாகும்.

தத்ரு என்கிற சர்மரோகம் பலருக்குத் தோன்றும் வெகு சாதாரணமான சர்மரோகம். இதைப் படையென்றும், எச்சிற்தழும்பு என்றும் வழங்குகிறார்கள். இளங்குழந்தைகளுக்கு இது தலையிலுள்ள கபாலத் தோலை தாக்கும். அதைச் சாமானியமாய் மண்டைக் கரப்பான் என்று கூறுவர். பிறருக்கு இச்சர்ம வியாதி இடுப்பில் துணியுடுத்துமிடங்களிலும், கழுத்தின் பின்புறத்திலும் அதிகமாகத் தோன்றும். இதுவும் அதிக அரிப்பைத் தரும். சொறியச் சொறிய படை அதிகரிக்கும். ஒருவாறு மஞ்சள் அல்லது பழுப்பு நிறமான செதிள்கள் (சொறிவதால்) அவற்றிலிருந்து கிளம்பும். சில சாதாரண மருந்துகளை உபயோகித்தால்கூட இப்படை ஒருவாறு தணிந்து மறையும். ஆனல் மீண்டும் சில நாட்களில் அதே அவயவங்களில் இன்னும் அதிக அரிப்பைக் கொடுத்துக்கொண்டு கிளம்பும். இதற்கு ஏற்ற சிகித்ஸை செய்யாமல் அலக்ஷியம் செய்தால், தத்ரு என்கிற இப்படை சர்மத்தை மிகவும் தடிக்கச் செய்து அரிப்பையும் அழற்சியையும் அதிகரிக்கச் செய்து எளிதில் நிவாரணமாகாதென்று நினைக்கும்படி முதிர்ந்து விடும்.

விசர்ச்சிகா என்கிற சர்ம ரோகத்தை ஆங்கிலத்தில் ஸ்கேபிஸ் என்று வழங்குபவர். ஆரம்பத்தில் இதுவும் சிறு கடுகைப்போல் விரல்களுக்கு இடையில் தோன்றி, பிறகு அங்கிருந்து பல பாகங்களிலும் பரவக்கூடியது. விரல்களுக்கிடையிலும் கணுக்கையின் முன்புறத்திலுமுள்ள சர்மம் மிக்க மேன்மையாயிருப்பதால், விஷகுணமுள்ள ஒருவகை நுண்

ணுயிர் அப்பாகங்களில் எளிதில் உட்புகுந்து, இவ்வியாதியை யுண்டுபண்ணுகிறது. இவ்விஷக் கிருமி சர்மத்திற்கு அடியில் உட்புகுந்து இடம் பெற்ற பிறகு, இது விளைவிக்கும் அரிப்பும் தினவும் தாங்க வியலாததாய் விடுகிறது. இந்த அரிப்பு இராக்காலத்திலே மிகவும் அதிகரிக்கும். அப்படி சொறியச் சொறிய, சிறிய கொப்புளங்களில் துர்நீர் அதிகமாய் கொப்புளங்களின் முனைகள் உடைந்து துர்நீர் கசிவு ஏற்படும், சிறிய கொப்புளங்கள் பெருங் கொப்புளங்களாக விருத்தியடைந்து, துர்நீர் சீழாகவும் மாறி பல பாகங்களிலும் புண்கள் பரவி விடும்.

**விஸர்ப்பம்** என்பது அதிக துர்நீர்க் கசிவுடன் கூடிய கொப்புளங்கள் அடங்கிய சர்ம ரோகம், இதில் வீக்கமும் அழற்சியும் பலமாயிருக்கும். இது உண்டாவதற்கு முன் பெரும்பான்மையோருக்கு ஜுவரமும் காணும். சிலருக்குக் குளிர் நடுக்கமும், சிரோ வேதனையும், கண்களில் அழற்சியும் தோன்றும். குழந்தைகளுக்கே இது வெகு சாதாரணமாய் உண்டாகும். மார்பு, முன்னெற்றி ஆகிய அவயவங்களைப் பொதுவாக இவ்வியாதி தாக்குவது வழக்கம். கொப்புளங்கள் தோன்றியவிடம் செந்நிறமாகக் காணும். இது தோன்றிய ஐந்தாம் அல்லது ஆறும் நாள் கொப்புளங்கள் வெடித்து, துர்நீர் வெளிவரவே, செந்நிறம் மாறுபாடு அடைந்து உடல் வலி முதலிய கோளாறுகளும் தானே தணிவடையும். பலமான விஸர்ப்பத்தினால் ஒவ்வொரு சமயம் ஸன்னிபாதக் கோளாறுகள் என்கிற கடுமையான சில உபத்திரவங்களும் காண்பதுண்டு. இதைத் தமிழில் அக்னியம்மையென்றும், அக்னியென்றும் வழங்குவர்.

**அரும்ஷிகா.** இரத்தமும் சீழும் வடியும் கட்டிகளை அரும்ஷிகா என்னும் சர்மரோகமாக வழங்குவர். இரத்த தோஷத்தினால் உடலில் பல இடங்களிலும் இது தோன்றலாமாயினும், பெரும்பாலும் தலையிலுள்ள சர்மத்தையே தாக்குகிறது. ஒவ்வொரு கட்டியும் பல முகங்களுடன் உண்டாகி, அம்முகங்களிலிருந்து துர்நீரும், இரத்தமும், சீழும் பலவாறு கசியும். இதில் கபதோஷம், இரத்தத் தோஷம், கிருமி தோஷம் ஆகியவை சேர்ந்து வியாதியை விளைவிக்கும். வியாதியாரம்பத்தில் சிறிது குளிரும் ஜுரமும்கூட தோன்றுவதுண்டு. இது இளங் குழந்தைகளையும் சிறுவர் சிறுமிகளையும் பொதுவாகத் தாக்குவது வழக்கம்.

## சிகித்ஸை

முற்கூறிய சர்ம வியாதிகளைப் பரிஹரிக்கக் கையாள வேண்டிய முறைகள் அந்தந்த வியாதி நிலைமைகளையும், பிணியாளிகளின் தேகக் கூறுகளையும் பொருந்தியனவாயிருக்கும். சர்மரோகங்களுக்கு உள்ளானவர் நல்ல தேக வலிமையுள்ளவராகவும், வேறு வித நோய்களில்லாதவராகவும், சுறுசுறுப்பாகவும் இருந்தால், அவர்களுக்குக் கண்டுள்ள சர்ம வியாதிகளைப் பெரும்பாலும் மேலுக்கு உபயோகிக்கும் சிறந்த மருந்துகளைக்கொண்டே பரிகரிக்க அநுகூலங்கள் பல உண்டு. பாமா, கச்சூ, விசர்ச்சிகா, தத்ரு ஆகிய சர்மரோகங்களில் உபயோகிக்கத் தகுந்த பொதுவான சிறந்த ஔஷதங்கள் சர்மரோகாந்தக லேபமும், இரஸோக்தமாதி சூர்ணமுமேயாம். பாமா முதலிய கசிவுள்ள சர்ம ரோகங்களில், சுத்தமான பஞ்சைக் கொண்டு துர்நீர்க் கசிவுகளை நன்றாகத் துடைத்துச் சுத்தம் செய்துவிட்டு, சர்மரோகாந்தக லேபம் போன்ற களிம்பை அந்தப் புண்கள் அல்லது படைகளின் மேல் அழுந்தத் தடவி, இரண்டு மூன்று மணி நேரம் ஊறிய பிறகு, அவ்விடங்களைக் கழுவிச் சுத்தம் செய்துவிட வேண்டும். இவ்வாறு நாளொன்றுக்கு இரண்டு முறை செய்து வந்தால், அவ்வித சர்ம வியாதிகள் ஸாதாரணமாய் நாலைந்து நாட்களிலேயே தணிந்து நிவாரணமாய் விடும். சிறிது கடினமான சர்ம வியாதிகளாயிருந்தால் ஒரு வாரத்தில் நீங்கும். மேலே போடப்பட்ட மருந்துக் கசிவுகளை அலம்புவதற்கு சமைத்துக் குழையச் செய்த சீய்க்காய் கஷாயத்தையும், வெந்நீரையும் உபயோகிப்பது நலம்.

விஸர்ப்பம், சுரும்ஷிகா ஆகிய சர்ம ரோகங்களில் உபயோகிக்க ஜாத்யாதி க்ருதம், சததௌத க்ருதம் ஆகிய பூச்சு மருந்துகள் தகுந்தவையாம். அரும்ஷிகா போன்ற நோய்களில் ஆளிவிதை மாவைக் களிம்பு போல் நீர்விட்டுக் கிளறி, கட்டிகளின் மேல் போட்டு, அக்கட்டிகள் உடைந்து, துர்நீர் வெளியான பிறகு அவ்விடங்களைப் பஞ்சு முதலியதால் துடைத்துச் சுத்தம் செய்த பின், முற்கூறிய க்ருதங்களில் ஒன்றை அவற்றின் மேல் கனமாகப் பூச வேண்டும். இரத்தக் கட்டிகள்போன்ற அரும்ஷிகா வியாதியில் முசுமுசுக்கை இலைகளைச் சிறிது விளக்கெண்ணெய் தடவி வதக்கி மேலே போட்டு வந்தால், அச்சிறு கட்டிகள் எளிதில் பழுத்து உடைந்து துர்நீர்களும் நன்கு வெளியாய் விடும். அதன் பிறகு ஜாத்யாதிக்ருதம் அவற்றின் மேல் போட உதவும். கடுமையாயில்லாத சர்ம ரோகங்களிலும், சொற்ப காலத்திற்குள் உண்டான அவ்வித ரோகங்களிலும் பொதுவாய் உபயோகிக்கக்கூடிய ஔஷதம் ஹேம க்ஷீர்யாதிலேபம் என்பது. சொறி, சிரங்கு முதலிய எவ்வித சர்ம வியாதியிலும், அது ஏற்பட்ட வெகு சீக்கிரத்தில் இந்த லேபத்தை மேலே தடவி வந்தால், அச்சர்ம ரோகங்கள் எளிதில் தணிந்துவிடுவதுண்டு.

பலமான சர்ம வியாதிகளிலும், நீடித்த காலமாயுள்ள அவ்வித நோய்களிலும் மேலுக்கு ஔஷதங்களை உபயோகிப்பதுடன், இரத்தமும் சர்மமும் தோல் சுத்தமாய் பலமடையும்படியான சில ஔஷதங்களை உட்கொள்வதும் அவசியம். தத்ரு, பாமா போன்ற தோலைப்பற்றிய நோய்களால் வருந்துபவர் அயஸ்-காந்த ஸிந்தூரத்தையாவது, லோஹர ரஸாயனம் என்னும் ஔஷதத்தையாவது சில வாரங்கள் தொடர்ந்து உட்கொண்டு வரலாம். அரும்ஷிகா முதலிய வியாதிகளில் சங்கபாஷாணாதி வடி என்கிற மருந்து அதிக உபயோகமானது. முற்கூறிய சர்ம வியாதிகள், இங்கே குறிப்பிட்ட ஔஷதங்களை உபயோகித்துத் தணிந்த பிறகு, இரத்த சுத்தி முதலியதற்காக உட்கொள்ள வேண்டிய மருந்துகளைப் பின்னும் சில காலம் நீடித்து உட்கொண்டு வந்தால், தணிந்து போன சர்ம ரோகங்கள் மீண்டும் உண்டாகாமலிருக்கும்.

---




"உன் பெயரென்ன?"

"முத்து"

"உன் தகப்பன் பெயர்"

"வேலு"

"உனக்கென்ன வேலை?"

"எதுவும் கிடையாது"

"ஜீவனத்திற்கு மார்க்கம்?"

"பிச்சையெடுப்பது?"

"உனக்குத் தெரிந்தவரையில் முழு உண்மையையும் சொல்லுவதாகப் பிரமாணம் செய்துகொடுத்திருக்கிறாய்."

"ஆமாம். உண்மையைத் தவிர நான் பொய் சொல்லமாட்டேன்."

கோர்ட்டில் சாட்சிக் கூண்டில் நிறுத்தப்பட்டிருந்த முத்து நிர்ப்பயமாகப் பதிலளித்து வந்தான். அவன் பேச்சிலும் தோரணையிலும் பொய்யென்பது துளிக்கூடத் தொனிக்கவில்லை. சர்க்கார் தரப்பு வக்கீல் கேட்ட கேள்விகள் அவ்வப்போது அவனுக்குப் புரியாததால் சற்றுத் தயங்கினான். அதைத்தவிர, உண்மையை மறைத்துப் பேசுவதான சாயலே அவன் பேச்சில் காணோம். விசாரணை நடுவில் "முதலில் எனக்குத் தெரிந்த விஷயங்களையெல்லாம் கேள்வி பதிலாக இல்லாமல் நானே சொல்ல அநுமதிக்கவேண்டும்." என்று முத்து கேட்டுக்கொண்டான். கோர்ட்டார் அநுமதி தரவில்லை. பதில்கள் மூலம் அவன் கொடுத்த விவரங்கள் வருமாறு:—

ரத்தினம் என்னைப்போலபிச்சையெடுத்து ஜீவித்துவந்தான். அவன் நொண்டியாக இருந்தபடியால் அவனுக்கு மற்றெல்லோரையும் விட அதிகப்படியாகத் துட்டு கிடைக்கும். கிடைத்த பணத்தையெல்லாம் அவன் தனக்காகவே செலவழிப்பதில்லை. எங்களுக்காகவும் செலவு செய்வான். பணம் கொஞ்சமாக இருந்தால் அரிசி வாங்கிக் கஞ்சி காய்ச்சிக் குடிப்போம். அதிகமாக இருந்தால் காபி வாங்கிக்கொண்டு வந்து குடிப்போம். அவன் தனவந்தனாக இருந்தவனென்பது அவன் நடவடிக்கையிலேயே தெரியும். என்னைவிட்டு அவன் ஒருபோதும் பிரிந்ததில்லை. எங்கே போகவேண்டுமானாலும் என்னையும்கூட அழைத்துக்கொண்டுதான் போவான்.

ஒருநாள் பெருமாள் கோவில் மேலண்டைவீதியில் நாங்கள் பிச்சையெடுத்துக்கொண்டிருந்தோம். ஒரு வீட்டு வாயிலில் ஒரு பெண் நின்றுகொண்டிருந்தாள். அவளைப் பார்த்தவண்ணம் ரத்தினம் நின்றுவிட்டான். எவ்வளவு கத்தியும் அந்த வீட்டில் பிச்சைபோடவில்லை. அந்தப்பெண் அலட்சிய பார்வையுடன் நின்றுகொண்டேயிருந்தாள். அதை ரத்தினம் லட்சியம் செய்யவே இல்லை. பார்த்துக்கொண்டேயிருந்தான். நான் பலவந்தமாகப் பிடித்து இழுத்ததால் தான் இருந்த இடம்விட்டுப் பெயர்ந்து வந்தான்.

இரவில் ரஸ்தா பிளாட்பாரமாகிற எங்கள் படுக்கையறையில் போய்ப்படுத்தோம், அப்பொழுது அவன் சொன்னான்:

"முத்து. அவள் தாசி லச்சுமி காந்தத்தின் மகள். எனக்கு அவளைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆசை"

"ஆ" என்று நான் ஆச்சரியப்பட்டுக் கேட்டேன்.

அவன் என்னைத் தடுத்து பேசத்தொடங்கினான். அதற்குள் பிரமித்து விடாதே. மூடவன், பிச்சைக்காரன் இவனுக்கு இவ்வளவு ஆசையா என்று நீ கேட்கலாம். எனக்கு யாரும் பெண் கொடுக்க மாட்டார்கள். அந்தப் பெண் தாசித்தனத்தில் இறங்காதபடி நானே கல்யாணம் செய்துகொள்ளலாமென்று உத்தேசித்து அவள் தாயைக் கேட்டேன். அவள் தாயும் இதற்கு ஒப்புக்கொண்டாள்.

மறுபடியும் இச்செய்தி என்னைத் தூக்கிவாரிப்போட்டது. ஐந்நூறு ரூபாய்க்கு நகை போடுவதாக இருந்தால் நான் அப்பெண்ணை கல்யாணம் செய்துகொள்ளலாமென்றும், பிறகு நான் எந்தக் கூலிவேலையாவது செய்து அவளைக் காப்பாற்றினால் போதுமென்றும் அவள் தாயார் கூறினாள். எப்படியாவது பிச்சைப் பணத்தில் மிச்சம் வைத்து ஐந்நூறு ரூபாய் சேர்த்து விடவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன்.

தேவாரம், திருப்புகழ் முதலியவற்றை ரத்தினம் மனப்பாடமாகப் படித்திருந்தவன். இவனுடைய தகப்பன் கோவிலில் ஓதுவாமூர்த்தியாக இருந்தவன். பால்யத்திலேயே நொண்டியான ரத்தினத்தை விட்டு அவன் தகப்பன் இறந்துவிட்டான். பிச்சை

யெடுப்பதைத்தவிர அவனுக்கு வேறு ஜீவனமார்க்கமே இல்லாது போய்விட்டது.

பிரதிதினமும் மாலை ஆறு மணிக்கு விபூதியை நெற்றி நிறையப் பூசிக் கொண்டு துண்டை விரித்துத் தேவாரத்தைப் பாட வாரம்பிப்பான் ரத்தினம். கேட்பவர்கள் உள்ளம் உருகிப்போய் விடும். சந்நிதானத்திற்குச் செல்வோரும் சந்நிதானத்திலிருந்து வருகிறவர்களும் சற்று நேரம் நின்று அவன் பாட்டைக்கேட்டு விட்டுத் தங்கள் சக்திக்கு மிஞ்சியே தர்மம் செய்துவிட்டுத்தான் போவார்கள்.

ஒருநாள் இரவு ஏழுமணியிருக்கும். 'வருமாந்தளிர் மேனி' என்று ஆரம்பிக்கும் தேவாரச் செய்யுளை அவன் பாடிக்கொண்டிருந்தான். பாட்டு மிகவும் உருக்கமாக விருந்தது. அதைக்கேட்டுக்கொண்டு நின்றார் ஒரு பெரியவர். அவர் ஒரு பெரிய உத்தியோகஸ்தரைப்போல் காணப்பட்டார். அவர் நின்ற மாதிரியில், பாட்டிலேயே அவர்மெய்ம் மறந்துபோய்விட்டதாகத் தெரிந்தது. பைக்குள் கையைப் போட்டார். ஒரு கத்தை நோட்டுகளை, எடுத்து ரத்தினத்தின் கையில் கொடுத்து விட்டுப்போய் விட்டார்.

பெரும் பணம் கைக்கு வந்தவுடன் அவன் பிரமித்துப் பாட்டை நிறுத்தி விட்டான். வெளிச்சத்திற்கு என்னையும் இழுத்துக் கொண்டுபோய் நோட்டுகளை எண்ணிப்பார்த்தான். ஒரு ஆயிரம் ரூபாய் இருந்தது. உடனே துள்ளினன்; கூத்தாடினன்; ஓடினன்.

மறுநாள் மாலை லச்சிமிகாந்தத்தின் வீட்டில் பட்டாடையோடு அவனைப்பார்த்தேன். தன்னிடம் நான் பேசினல் தன்னை லச்சிமிகாந்தத்தின் மகள் இளப்பமாக நினைப்பாளென்றுசொல்லி என்னைப்போகச் சொல்லிவிட்டான். மறுநாள் கோவிலுக்குப்போய் லச்சிமிகாந்தத்தின் மகளுக்குத் தாலியும் கட்டிவிட்டான்.

ஒரு மாதத்தில் ஆயிரம் ரூபா தீர்ந்துபோய்விட்டது. ரத்தினத்திற்கு வேறு வேலையும் கிடைக்கவில்லை. இரண்டு மாதங் கழித்து ஓரிரவில் ரத்தினத்தைக் கடை வீதியில் பார்த்தேன். தன்னிடம் பணமில்லாததால் லச்சிமிகாந்தத்தின் மகள் தன் பரம்பரைத் தொழிலை யாரம்பித்துவிட்டதாகவும், தான் விஷயத்தை அப்படியே விடப்போவதில்லையென்றும் அவளை ஒரு கை பார்க்கப்போவதாகவும் சொன்னன். நாலைந்து நாட்களில் அப்பெண்ணை அவன் ஹிம்ஸித்துவிட்டதாக ஊரில் பேசிக்கொண்டார்கள். இவ்வளவுதான் எனக்குத் தெரியும்."

வக்கீல் தன் ஸ்தானத்தில் உட்கார்ந்தார். மிகவும் தழதழத்த குரலில் எதிரி ரத்தினத்தைப் பார்த்து நீதிபதி கேட்டார்.

"ரத்தினம்! நீ ஒரு பெண்ணின் கால்களை வெட்டிக்காயமுண்டு பண்ணியதாக சாட்சியமேற்பட்டிருக்கிறது. ஏதாவது சொல்ல விரும்புகிருயா?"

**ரத்தினம்:**—ரெண்டு வார்த்தை சொல்றேனுங்க. முத்து சொன்னதெல்லாம் நிஜம். நான் அந்தப் பெண்ணின் காலை வெட்டியதும், உண்மை. இதுக்கெல்லாம் காரணம் எனக்கு ஆயிரம் ரூபாய் கிடைச்சதுதான். எந்தப் பாவியோ, அவ்வளவு பணம் கொடுத்தான். என் நிலைமையை மறந்து தாசி வீட்டுலெ கல்யாணம் பண்ணிகிட்டேன். அவளைக் காப்பாற்ற வழியில்லை. மற்றக் காரியங்கள் எல்லாம தொடர்ந்து வந்ததுங்க.



* * *

தான் இந்த வழக்கில் தீர்ப்புக் கூற முடியாதென்று சொல்லி வழக்கை நீதிபதி வேறு கோர்ட்டுக்கு மாற்றி விட்டார்.

ஏன்? அன்று ராத்திரி ரத்தினத்தின் பாட்டைக் கேட்டு ஆயிரம் ரூபாய் கொடுத்தவர் அந்த நீதிபதியேதான்!

# பழிக்குப்பழி

பி. ஸி. பாலகிருஷ்ணன்

கிட்டு தன் மாமாவின் வீட்டிற்கு வந்திருந்தான். மாமாவின் பிள்ளை மணி மகா பொல்லாதவன். சதா யாருடனாவது சண்டை போட்டுக்கொண்டே இருப்பான். மற்ற சிறுவர்களை பலமாக அடித்துவிட்டு ஓடுவதில் அவனுக்கு வெகு ஆனந்தம்.

ஒரு நாள் கிட்டுவும், மணியும் திண்ணையில் உட்கார்ந்து விளையாடிக்கொண்டிருந்தனர். ஏதோ சண்டை கிளம்பவே மணி கிட்டுவின் முதுகில் ஓர் குத்து விட்டான்.



கிட்டு வலியினால் துடித்தான். அன்று இரவு முழுவதும் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. ஆகவே மணியைப் பழிக்கு பழி வாங்க எண்ணினான்.

மறு நாள் சாயங்காலம் கிட்டுவும், மணியும், திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருந்தனர். அப்பொழுது கிட்டு, மணியிடம் "மணி நீ நேற்று என் முதுகில் குத்தினதினால் எனக்கு ராத்திரி முழுதும் தூக்கம்வரவேஇல்லை. இன்று ராத்திரி உன்னைத் தூங்கவிடாமல் பண்ணிவிடுகிறேன் பார்" என்றான். அதற்கு மணி சிரித்துக்கொண்டே தன் முதுகைக் கிட்டுவின் பக்கம் திருப்பி "பலமாகக் குத்து" என்றான்.

"போடா போடா உன்னைக் குத்தாமலே என் வேலையைச் செய்கிறேன் பார்" என்றான் கிட்டு.

"எப்படிச் செய்கிறாய் பார்க்கலாம்" என்றான் மணி.

"அது கிடக்கட்டும், ஒரு கதை சொல்கிறேன் கேள்" என்றான்.

அவன் சொன்ன கதை கீழே இருப்பதுதான்:—

ஒரு ஊரில் வேலன் என்று ஒரு இடையன் இருந்தான். அவன் தினந்தோறும் தன் மந்தையை மேய்த்துவிட்டு வருவான்.

ஒரு நாள் அவன் வழக்கம் போல் தன் மந்தையை ஓட்டிக்கொண்டு ஓர் மலையடிவாரத்தை அடைந்தான். அதுவரையில் அவன் கண்டிராத குகையொன்று மலையடிவாரத்தில் தெரிந்தது. அதனுள் செல்ல வேண்டுமென்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று.

உடனே அவன் தன் மந்தையையும் மறந்துவிட்டு குகையின் வழியே செல்லலானான். வெகு சீக்கிரமே மலையின் பின் பாகத்தை அடைந்தான். அங்கே அவன் முதலில் கண்டது ஒரு கோட்டைச் சுவர். அது பல இடங்களில் இடிந்து இருந்தது. வேலன் வியப்புடன் அச்சுவரைப் பார்வையிட்டான். பிறகு ஓர் பொந்தின் வழியாக உள்ளே பிரவேசித்தான்.

கோட்டையில் வெகு நாழி சுற்றி அலைந்தான் வேலன். கடைசியாக ஓர் பாழடைந்த மண்டபத்தண்டை வந்து சேர்ந்தான். அந்த மண்டபத்தின் தூண்களில் அழகிய பொம்மைகள் கொத்தப்பட்டிருந்தன. வேலன் தன் முழு பலத்தையும் போட்டு ஓர் பொம்மையைப் பிடுங்கி எடுத்தான்.



"திருடன்! திருடன்!!" என்று மண்டபத் தூணிலிருந்து ஓர் கூக்குரல் எழும்பவே, வேலன் பயந்து போய் பொம்மையும் கையுமாகத் தன் வீட்டை நோக்கி ஓடினான். போகும் வழியில் அவனுடைய மந்தையைக் காணவில்லை.

வீடு திரும்பிய வேலன் நடந்தவற்றை ஒன்றுவிடாது தன் தாய் பொன்னியிடம்

கூறினன். மந்தை காணுமற் போனதினுல் அவள் கவலைப்பட ஆரம்பித்தாள்.

அன்று இரவு வேலனின் தூக்கம் கலைந்தது. ஒரு கரிய உருவம் அவர்களுடைய குடிசைக்குள் வந்து எதையோ தேடிவிட்டுச் சென்றது. வேலனுக்குப் பயமாக இருக்கவே தன் தாய் பொன்னியை எழுப்பினன்.



மறுநாள் ராத்திரியும் அதேமாதிரி நடந்தது ஆகவே வேலனும், பொன்னியும் தங்கள் குடிசைக்கு ஏதோ கேடு வந்துவிட்டது என்று எண்ணினர்.

காலையில் எழுந்திருந்து பார்த்தபோது வேலன் எங்கும் காணவில்லை. பொன்னி குடிசைக்கு வெளியே போய் வேலனின் பெயரைச் சொல்லிக் கூவினுள். பதில் இல்லை. திடீரென்று ஒரு யோசனை தோன்றவே பொன்னி மலைக்கு ஓடினுள். அவள் அங்கே கண்ட காட்சி அவளைப் பிரமிக்கச் செய்தது. மூன்று கரிய உருவங்கள் வேலனை சரசர வென்று இழுத்துக் கொண்டு குகையினுள் போய்க்கொண்டிருந்தன.

'வேலா' என்று கூவினுள் பொன்னி. சப்தத்தைக் கேட்ட பிசாசுகள் வேலனைப் போட்டுவிட்டு மறைந்தன. வேலன் கண்விழித்தெழுந்தான். நடந்தவற்றைக் கேட்டு பயமடைந்தான்.

"வேலா, நீ பிசாசுகளின் பொம்மையைத் திருடியதனுல்தான் உனக்கு இந்தக் கேடு வருகிறது. உடனே சென்று அதை அங்கே எறிந்துவிட்டுவா" என்ருள் பொன்னி. வேலன் உடனே பொன்னி சொன்னபடிச் செய்தான். அன்றைக்கு அவர்கள் குடிசையில் ஒன்றும் நேரவில்லை.

கிட்டுவின் கதையைக் கேட்ட மணி சிரித்தான்.

"போடா கிட்டு, உன் பிசாசையும் பேயையும்கண்டு எனக்குப் பயம் இல்லை" என்ருன் அவன்.

* * * *

மணி தன் அறையில் தூங்கிக்கொண்டிருந்தான். அவன் அறைக் கதவு மெள்ளத் திறந்தது. உள்ளே ஒரு கறுப்புப் பிசாசு வந்தது. மணி திடுக்கிட்டு விழித்துக்கொண்டான். பிசாசு அவனுடைய அலமாரியிலும் பெட்டியிலும் ஏதோ தேடிக்கொண்டிருப்பதைக் கண்டான். அவனுக்குப் பயம் பிடித்துக் கொள்ளவே,

'ஐயோ பிசாசு!' என்று கத்தினன். உடனே பிசாசு அவன் அறையிலிருந்து வெளியே ஓடிவிட்டது.

மணியின் கதறலைக் கேட்ட மாமாவும், மாமியும் ஓடிவந்தனர். அவனுக்குத் தேறுதல் கூறிவிட்டுச் சென்றனர். மணி தனக்கு இருந்த பயத்தினுல் தூங்கவே இல்லை.

மறுநாள் இரவும் அதே மாதிரி ஒரு பிசாசு உள்ளே வந்தது. மணி கத்த வாய் எடுத்தபோது அந்தப்பிசாசு அவன் வாயைப் பொத்தி,



"அட அசடே, ஏன்டா கத்துகிருய்?" என்றது. மணி பேயின் முகத்தை நோக்கினன். என்ன ஆச்சர்யம்! அங்கே கிட்டு கறுப்பு உடைகள் அணிந்துகொண்டு நின்றிருந்தான். மணியின் பயம் போகவே அவன் கவலையற்று தூங்கினன்.

இதற்கப்புறம் மணி ஒருவருடனும் சண்டை போட்டது கிடையாது.




அவள் திடமான ஆரோக்யமும் யௌவன சக்தியும் வசீகரமான கண்களும் அழகிய மேனியும்பெற்றிருக்கிறாள். இதற்கு பைல்பீன்ஸ் தான் காரணம்.

சுத்தமான தாவரப் பொருளான பைல்பீன்ஸ் நீங்கள் தூங்கும்பொழுதே உட்புற சுத்தத்தை அளிக்கின்றது தேக உறுப்புகளை பண்படுத்தி கழிவடைப் பொருள்களை நீக்கி, ரத்தத்தைச் சுத்திசெய்கின்றது. பைல்பீன்ஸ் உங்களை சக்தியும் அழகும் ததும்பச் செய்யும்.




# BILE BEANS

பெண்டிர் அனைவரையும் இருமடங்கு அழகுபடுத்தும்.

ஏஜண்டுகள மெஸர்ஸ் தாதா & கம்பெனி, பிடி மதராஸ்







ஜலதோஷம் பிடிக்கும் அபாயம் பெரிய ஜனத்திரள்களில் எப்பொழுதும் ஒளித்திருக்கத்தான் செய்கிறது.
ஜலதோஷத்தின் முதல் அறிகுறியிலேயே மிஸ்டாள் உபயோகியுங்கள். ஒவ்வொரு நாசித்துவாரத்திலும் ஒன்றிரண்டு சொட்டு உடனேயே நிவர்த்தியளிக்கும். மிஸ்டாள் இதமானது-பழுப்பையகற்றி, தேக்கத்தை யொழிக்கிறது. நீங்கள் மீண்டும் சுகமாகச் சுவாஸிக்கிறீர்கள்.




மிஸ்டாள்

## பெண்களின் பொக்கிஷம்!

# மோஹனா கூந்தல் தைலம்

வைத்திய சாஸ்திர முறைப்படி தயாரிக்கப்பட்டது. ஜீவசக்தி வாய்ந்த கூந்தல் தைலம் அழகான கேசத்தை பட்டுப்போல் மிருதுவாக, நீண்டு வளரச் செய்கிறது.

இன்றே உபயோகித்து திருப்தி அடையுங்கள்.

விலை ரூ. 1—4—0 : : கேட்லாக் இனம்.

**மலையாள மெடிகல் ஹால் (REGD)**

189, வக்கீல் புது தெரு, — Post Box No. 27 — மதுரை.

H. O. TRIVANDRUM

பிராஞ்சுகள்:—

207, நாகேஸ்வரர் வடக்கு வீதி, கும்பகோணம்.
20, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, G. T. மதராஸ்.
58E, தர்மராஜா கோவில் வீதி, பெங்களூர், தண்டு.
179, SEA STREET, COLOMBO.

# ஜீவசக்தியின்மை !



ஒவ்வொருவரும் ஜீவசக்தி ததும்பி இருக்க வே விரும்புவர். ஆனல் உண்மையில் ஆயிரக்கணக் கானவர் சோர்வுற்று கவலையினுலும் அதிக வேலை யினுலும் தளர்ச்சியுற்று அஜீரணம், மலச்சிக்கல், வலிப்பு மற்றும் பலவித நோய்களுக்கும் ஆளாகின்றனர். இவ்வித நிலைகளில் விகரின் ஒன்றுதான் பூரண ஆரோக்யமளிக்கும் மருந்து. இதன் அபூர்வ சக்தியினுல் உங்கள் நரம்புகள் வலுவடைந்து, கண் களும் உடம்பும் பிரகாசமடைந்து இளமையின் பூரணப் பொலிவை யும் அடைகின்றீர்கள். விலை ரூ. 3 தபாற் செலவு அணு 13 மட்டும்

## ஸ்திரீகளின்



## ஆரோக்யத்துக்கும் சந்துஷ்டிக்கும்!

அழகும், வசீகரமும், ஆரோக்கியமும் உள்ள ஸ்திரீகளே ஆடவ ரால் விரும்பப்படுவர். ஸ்திரீகளின் கர்ப்பக் கோளாறுகளினுல் தலைவலி, வயிற்றுவலி, மயக்கம், ரத்தசோகை முதலிய பல வியாதி கள் சம்பவித்து ஸ்திரீகளின் அழகை குன்றச் செய்து தேகத்தையும் ஆரோக்யக் குறைவினுல் பாழ்படுத்துகின்றன. வாழ்க்கையே கசந்து விடும். ஸ்திரீகளின் "அம்ருத சோகா" உட்கொண்டால் சகல வியாதிகளின் மூல காரணத்தையும் வேருடன் அழித்து குணப் படுத்துகின்றது ஒவ்வொரு குடும்பத்துக்கும் இன்றியமையாதது. விலை ரூ. 4-8-0. தபாற் செலவு 13 அணு மட்டும்.

**Kaviraj R. N. CHAKRAVORTI,**

Ayurvedshastri (S. W.)

**HARIHAR AYURVED OUSHADHALAYA,**

**BHOWANIPUR :: CALCUTTA, 25.**

ஸ்டாக்கிஸ்டுகள் :-

மெஸர்ஸ் மில்டன் அண்டு மில்லர், 1/157, பிராட்வே மதராஸ்.
மெஸர்ஸ் அப்பா அண்டு கம்பெனி,
286, சைனுபஜார் ரோட் மதராஸ்.
மெஸர்ஸ் எம். டி. வோரா அண்டு கோ.,
166, பிரின்ஸஸ் தெரு பம்பாய்.
மெஸர்ஸ் சிவானந்தா செமிர் மெடிகல் ஹால்,
92, ஸீ தெரு கொளும்பு இலங்கை.




எந்த டாக்டரும்
எச்சமயமும்
**இதைத்தான் விதிப்பது**

மருந்து சாப்பிட ஆரம்பித்ததுமே கபத்தைக் கலைத்து, மூச்சுத்திணறலை மட்டுப்படுத்துவதுடன், மலச்சிக்கலை மாற்றி, ஜீரண சக்தியைக்கொடுத்து, உடலுறுதிப் பெற வேலை செய்கிறது. புரோகித் ஸ்வாஸஹாரிதான் இந்த நோய்க்குக் கைகண்ட மருந்து. நுரையீரலை வலுவாக்கி, ஆஸ்த்மாவை அறவே தீர்க்கிறது. சுரம், கோளாறு, மூச்சுத்திணறல், இருமல், சுவாஸாசயக் கோளாறு முதலியவற்றுக்கு ஸ்வாஸஹாரி ப்ளெயின் (நீலப் பாக்கிங்) சிறந்தது.

சிவப்பு பாக்கிங் உள்ள ஸ்வாஸஹாரி காம்பௌண்ட் நீடித்த கடுமையான வியாதிகளைக் குணப்படுத்தும்.

3, 6, 12 அவுன்ஸ் ஸைஸ்களில் கிடைக்கும். விலை முறையே ரூ. 3-6-0 ரூ. 5-12-0, ரூ. 10-0-0. எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஆஸ்த்மா, சுவாஸாசய
நோய்களுக்கு டாக்டர்கள்
விதிப்பது



**புரோஹித ஸ்வாஸஹாரி**

**DR. PUROHIT PHARMACY,** KOLHAPUR.

சென்னை ஸ்டாக்கிஸ்டுகள்:

1. அப்பா அண்டு கோ., சைனுபஜார்.
2. நாதா அண்டு கோ.,
நயினியப்ப நாயக்கன் தெரு.

திருவாங்கூர் ஸ்டாக்கிஸ்டு:—

கே. ஸி. மாத்தியூ அண்டு கோ.,
கெமிஸ்ட்ஸ் & ட்ரக்கிஸ்ட், கோஜான்சேரி,
திருவாங்கூர்.